உ

கணபதிதுணை.



ஸ்ரீ சமிவனக்ஷேத்திரமென்னுங்
கோவிலூரின்கண் ணெழுந்தருளியிருந்த
ஸ்ரீ முத்திராமலிங்க ஞானதேசிகேசர் மீது
௸ தேசிகர் பரம பாதசேகரரும் கருணாநிதியெனக்
காரணப்பெயர் வாய்ந்தவருமாய

# ஸ்ரீ சிதம்பர ஞானதேசிகர்

திருவாய்மலர்ந்தருளிய

# ஸ்ரீ குருஸ்துதி குசுமாஞ்சலி.

இது
௸ க்ஷேத்திரத்தின்கண்
ஸ்ரீமுத்திராமலிங்க ஞானதேசிக ராதீனத்திற்
றற்காலம் ஞானதேசிகரா யெழுந்தருளி யிராநின்ற
ஸ்ரீவீரசேகர ஞானதேசிகர் மாணாக்கருள் ஒருவரான
க. வீ. சோ. அழகப்பய்யா அவர்களின்
வேண்டுகோளின்படி

௸ தேசிகரின் பாதசேகரரான
சுப்பையசுவாமிகளவர்களால்
பழைய ஏட்டுப்பிரதிப்படி பரிசோதித்து


சென்னை,
கோமளேசுவரன்பேட்டை,
சச்சிதானந்த அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

1909.



உ

சிவமயம்.

# குருஸ்துதி குசுமாஞ்சலி.

விநாயகர்ஸ்துதி.

இன்பெனு முத்தி ராம வெழிலரு ளிறைமேற் சொல்லுந், துன்பிலங் தாதி முற்றுந் துகளற முடிய வேண்டி, வன்பவ மிலாதோர் சூழும் வன்னிமா வனத் தின் மேவு, மன்புரு வான தந்தி முகத்தனை யகத்துள் வைப்பாம். 1

சொரூபஸ்துதி.

தனிமையாய்ப் பரமாய்ச் சகங்களின் கரியாய்த் தத் துவா தீதமாய்ச் சிவமா, யினிமைக டமினு மினிமை யா யிலங்கு மேகமே ஞானபூ ரணமே, புனிதர்சூழ் கழனி தனிலமர்ந் தருளும் புண்ணிய விறைவனைப் போற்றுந், துனியிலங் தாதி தனைக்குறை விலாமற் றுன்னுமென் னுளத்தினின் றுரையே. 2



## 1. பதிற்றுப்பத்தந்தாதி.



சத்தனே ஞானு னந்தத் தனியனே கழனி வாழு
முத்தனே முத்தி ராம முதல்வனே யெனையு மாண்ட
சுத்தனே துவித மெல்லாந் துகளற வொன்றாக் காட்டு
சித்தனே நீநா னாகத் திகழ்ந்திடப் புரித லென்றோ. [ஞ்

என்றனைத் தேடி யாண்ட வினையிலாக் கருணைக் குன்றே, நன்றுடன் றீது மற்ற நலமரு ளிறையே நா யேன், பொன்றுதல் சனித்த லற்ற புரணமா யிருக்கச்

செய்வாய், புன்றொழி லிலாத வன்பர் புந்தியுட் டிகழுந் தேவே. 2

தேவனே முத்தி ராம தேசிக மணியே நீங்காக்
கேவல சகல மற்ற கேடிலா நந்த மூர்த்தி
பாவனை யற்ற மோனம் பரிந்தருள் செய்வ தென்றோ
நாவலர் போற்றும் வன்னி நாதசிற் பரமாந் தேனே. 3

தேனினின் மொழியார் மைய றீர்ந்தநின் னடியரோடு, மானினல் விழியார் மோக மாய்ந்துநான் வாழ்வன் கொல்லோ, பானலங் கவர்ந்த தீஞ்சொற் பரமனே கழனி வாழு, ஞானநன் மணியே தேவர் நாடுதற் கரிய மன்னே. 4

மன்னவர் வாழ்வு மேலாம் வானவர் வாழ்வு மாலி, னன்னல முடைய வாழ்வு நலமிறீ வாழ்வா மென்றே, யுன்னிநா னவைக ணீங்கி யுயர்சுக வாழ்வை நண்ண, வன்னிமா வனத்தில் வாழும் வள்ளலே யருள்செய் வாயே. 5

அருளிலா நாயேன் றன்னை யாண்டருள் கழனித் தேவே, பொருளலா ஞேயந் தன்னைப் பொருளெனக் கருதா நின்ற, விருடனை நீக்கி ஞான வின்பினை யடையச் செய்வாய், பொருவிலா முத்தி ராம லிங்கபூ ரணனே பொன்னே. 6

பொன்னையே பொருளா வெண்ணும் புலையனைத் தேடி யாண்ட, வுன்னையே நினைந்து நாளு முருகலின் மனமாங் கல்லே, நின்னையே நாடச் செய்து நிகரற வுருகச் செய்வாய், முன்னையோர் துதிக்கும் வன்னி முதல்வனே குணநற் குன்றே. 7

குன்றென வசைவிலாத குழகனே கழனி வாழும்
பொன்றலி லிறையே தேவர் பூசுரர் மகிழும் பேறே

நன்றுறு துரிய முற்றே நலமுடன் வாழ்த லென்றே
வென்றனைத் தேடி யாண்ட வினையிலா வேக வின்பே.

இன்புரு வாகி யோங்கு மெழிலரு ளிறையே யென்றன், வன்பவ நீங்க நீங்கா வாம்பிலாக் கருணை செய்வாய், துன்பிறு துழன்ற சீவர் துகளெலாந் துரத் துஞ் சோதி, முன்பினு நடுவு மற்ற மூலமே ஞான விண்ணே. 9

விண்ணறல் வளிதீ மண்ணு மேவியும் வேருய் நின்றோய்
பெண்ணுட னலியு மாணும் பிறப்புட னிறப்புமில்லோய்
தண்ணென விருக்கு ஞான சமாதியென் றடையச் செய்
புண்ணிய முத்தி ராம போதகமணியே சித்தே. [வாய்

வேறு.

சித்தனு யடியர் பவத்தினை யகற்றுந் தேவனே மாசிலா மணியே, பித்தனு மெனையுந் தேடியே யாண்ட பேரரு ளாகாக் குருவே, முத்தியின் வடிவே மூலநற் பொருளே முத்திரா மையனு முனியே, நித் திய மான நினையக மென்றே நினைந்துநான் வாழ்ந்திட வருளே. 11

அருளதே யுருவாய் வதிந்தரு ளமுதே யமரர்க ளறிவரும் பொருளே, மருளனு மெனக்குங் கேடிலா னந்த வளம்பொழி ஞானநன் முகிலே,யிருளிலா விதய மலையெழு ஞான விரவியே கழனிமா நிதியே,பொருளெ னுந் துரியந் தனைமிக வடையப் புரணனே செய்வதுன் கடனே. 12

கடனென வடிய ருடல்பொரு ளாவி கவர்ந்துநற் றனையருள் பரனே, படமதில் விளங்கும் வன்னரூ பங் கள் படமதா யிருந்திடு முறைபோற், சடமிலா வறிவிற்

றேன்றிய சகத்துந் தவறிலா வறிவெனப் பகர்ந்தோய், மடமையில் லறிவை மடமையா மெனக்கும் வழங்கிய வன்னிமா வனத்தோய். 13

வனத்திலே சரித்து மலைதனிற் குகையில் வதிந்துமே நிரந்தரந் திரமாய், மனத்தினிற் பிரம மகமென விடாமல் வழுவிலாத் தியானமே செய்து, தனத்தினின் மேலாந் தனமரு ணிட்டை தமியனேன் சாருநா ளென்றோ, சினத்துவ மில்லா வினத்தவர் சூழுந் தேவனே கழனிமா கடலே. 14

கடலெழும் விடத்தை முனமயின் றதுபோற் கடையனே னுளத்தெழு மவாவாந், திடமதாங் கடுவை மிகையற வயின்றே திருவருள் செய்யுநா ளுளதோ, மடமையின் முனிவர் மகிழ்ச்சியோ டுறையும் வன்னிமா வனத்தனே மன்று, ணடமிடு மணியே நற்றவப் பயனே நன்கொடு தீங்குமில் லவனே. 15

இல்லவ டனங்க டுறந்திடா நாயே னிணையிலா வகத்துற வடைந்தே, சொல்லொணு நினைவில் சமாதியை யடைந்து சுகமுட னிருக்குநா ளென்றோ, தொல்லையாங் கழனி தனிலமர் நித்த சுத்தனே துகளுறு மனமாங், கல்லையுங் கரைக்குங் கருத்தனே கடலிற் கண்படை கொண்டமா முகிலே. 16

முகிலென வருளைப் பொழிந்தருண் முனியே முனிவர்க ளறிவரும் பொருளே, யகிலமுங் கடனு நொடியினி லழனு மகமெனுஞ் சமீரணன் றன்னைப், பகலுட னிரவு முலவிடா வண்ணம் பந்தனஞ் செய்திட வருளாய், சகமதிற் சிறந்த கழனியி லமர்ந்து தானுவே முளரியி லுறைவோய். 17

உறைந்திடுஞ் சிவ சுகபர மாகி யொளிர்பர தேசிகக் கொழுந்தாய், மறைந்திடா வொளியா யழிவிலாச் சுக மாய் வழுவிலாப் பரமநற் பொருளாய், நிறைந்ததத் துவமா முனையடைந் திருக்க நிகரிலாக் கருணையென் றருள்வாய், குறைந்திடாக் கழனிப் பதியினி லமர்ந்த குணக்கட லானசிற் பொருளே. 18

பொருள்வைமா நகரி லுகந்ததே சிகனுப் பொலிவுடன் விளங்குபே ரமிர்தே, யருளிலு யிர்கள் பிறவியாம் பிணிக்கோ ரருமருந் தானசஞ் சிவியே, தெருளிலா வெனது சிந்தையுட் டிகழுந் தெய்வமே கழனிவா னவனே, மருளதே செய்யு மகளிரின் வலை யை வறியனே னறுத்திடக் கருதே. 19

கருதொணு வதீத பரமனே மேலாங் கழனிவா ழருமறைக் கொழுந்தே, யிருமையின் சுகமும் விட மென வறிந்த விணையிலா வடியர்க ளுடனே, பொருவி லாச் சுகமா வனிதையைக் கருதும் புலையனேன் றனை யுமே யாண்ட, வருளனே யொன்றும் வேண்டிடா வரநீ யடியனேற் களித்திடென் னரசே. 20

வேறு.

அரசமிகு பவப்பிணிக்கோர் மருந்தா கின்ற வத் தனே மறைமுதலா மொலிக ளோடே, முரசதிருங் கழனிவளர் முத்தி ராம மூர்த்தியே முப்புரத்தின் கரி யே தேவே, நரவடிவா யென்போலத் தோன்றி நாயே னண்ணியிடும் பவமறுத்த நாதா நின்னைப், பரவிவணங் கிடவுருகக் காணப் பெற்றோர் பயனளவை யாராலும் பகர லாமோ. 21

பகரவொணு வானந்தக் கடலே கீழாம் பவக்கட லின் மாதரெனுஞ் சுழியிற் பட்டே, திகரமுடன் சுக

மிலதா யுழல்வோர் தம்மைச் சிவதீரத் தினிமேலேற்றுங் கப்பலான, சிகரமதாங் கழனிவளர் முத்தி ராம தேசிகனே யாரமிர்தே தேனே தெய்வ, நகருறையு மமரர் களு மறையுங் காணு நாதனே நின்னியல்பை நவில லாமோ. 22

நவில்வொணுத் துக்கமெனும் வடிவைத் தன்னை நம்புமடி யவரிடத்தி னெல்லாம் வாங்கிப், புவிதனிலே யிணையில்சுக மாகுந் தன்ன துருவளித்த பூரணனே புனிதா பொய்பாச், சவிநிறையுங் கழனிவளர் முத்தி ராம சற்குருவே தற்பரனே தமியே னெஞ்சக், கவி தன்னைநின் னருளாலே நீக்கி ஞானக் கவினளிப்பாய் கவி ஞர்களுங் கருதாக் கண்ணே. 23

கண்ணனயன் சிவன்முதலோர் கருத வொண் ணுக் காரணனே யாரணனே கழனி வாழும், பண்ண வனே சிவேச சகத்தாய் நின்றே பரவடிவா நினதுரு விற் குறைவொன் றில்லா, வெண்ணரிய பூரணநித் தியனே யாவு மீந்திடுசிந் தாமணியே யேழையோரை, புண்ணியனே யா வரமருளா யுகந்தா னென்னு முத்த மனே தற்பரனே யுரனே தேனே. 24

தேனின்மிகு மதுரம்வழிந் தொழுகுந் தேவுன் றிருவசனங் கேட்டவர்க ளதே யுற்ற,மானின்விழி மட வார்கண் முதலா மையன் மாசறவிட் டிணையினின தடி யிற் சேர்ந்தார், நானிலத்தில் விடயநசை மாறு நாயே னற்சரண மடைகுவது மெந்நாள் கொல்லோ, ஞானி களு முனிவர்களு நிறைந்து சூழ நற்கழனிப் பதியமர்ந்த ஞான வெற்பே. 25

ஞானமுடன் ஞேயஞா துருக்க ணீங்கி ஞானசுக சமாதிதனை நண்ணு வேனு, வானவரும் புகழ்முத்தி

ராம லிங்க வள்ளலே வன்னிவனம் வளருந் தேவே, யீனமிலா ஞானகன மணியே யெங்கு மிருளறவே விளங்குதின மணியே யன்ப, ரூனமிலா மனக்கமலம் விட்டு நீங்கா தோங்குகின்ற பிரமரமே யுண்மைப் பேறே. 26

பேறாகிப் பேறுடையோன் றானு மாகிப் பேறளிக்கு மவனாகிப் பெரியோ னாகிக், கூறான சிவேச சகத்து மாகிக் குணங்குறியொன் றறவிளங்குங் கோல மாகி, யீறாகி முதலாகி நடுவு மாகி யீனனேனன் றனையாண்ட வெந்தை யாகி, மாறாத வளநிறைந்த வன்னி வாழும் வள்ளலே யென்பிறவி மாற வெண்ணே. 27

எண்ணுதற்கு மரிதான தேவர் சித்த ரிணையிலா நினைத்தேடி யேங்கி வாட, மண்ணுலகி னாயேனைத் தேடி யாள மானுடனா வெழுந்தருளு மணியே மன்னே, விண்ணுலகோர்க் கரிதான பேரின் பத்தை மேவிநான் றடையறவே வாழ்நா ளென்றோ, கண்ணுண் மணி யெனவிளங்குந் தேசே மேலாங் கழனிநகர் தனிலமர்ந்த கருணை யோனே. 28

கருணையொரு திருவுருவா யெழுந்த தேனே கற்பகமே யற்புதமே கண்ணிற் காண, வுருவமுட னெழுந்தருளுங் குருவே கோவே யுத்தமனே தென்கழனி யுறையுந் தேவே, யிருணிறமாங் கூந்தலென மனமும் பெற்ற வேழையர்கண் மாமயலை யிதமா வெண்ணு,மருளறிவே யுறும்பரம மூட னேற்கம் மகளிரிடஞ் சார் நசையை மாற்றி டாயே. 29

மாற்றமக முடல்களினாற் சிரவ ணங்கண் மன்னுதியா னங்கினது பணியே செய்யுஞ், சாற்றரிய வடியருட னெனையு மாண்ட தயாபரனே சமிவனத்தி லம

ருங் கோவே, காற்றெனவுங் கறங்கெனவுஞ் சுழலா
நின்ற கருத்தினைநான் றகைந்திடுத லெந்நாள் சொல்
லேலா, சிற்றமிலா வடியமரெனு முடிக்கள் சூழச் சீர்மதியா
விளங்குபர தேவ தேவே. 30

வேறு.

தேவர்கண்மூ வருமறியாத் தேசிகநின் றண்மலரைப்
பாவனையா மிருளதனாற் பலபிறவிக் காடதனி
லோவலிலா துழலுமென துளந்தனிலே யிருந்தருள
வேவமிலாவருளதனை லென்றருளிச் செய்குவையோ. 31

செப்பவனைச் செய்பவையாய்ச் சேர்பயனை யானநினை
யையலறச் சேருமொரு வகையருளிச் செய்கிலையே
யுய்வகையா னறிவதிலே யொப்பிலா நிர்க்குணமாந்
தெய்வமதை யும்விளக்குந் தேசிகசிந் தாமணியே. 32

சிந்தா மணியெனவே தேடுமடி யாரவர்க்குச்
சிந்தா குலந்தவிர்த்த தேசிகனை மாமணியே
செந்தார் பொழில்புடைசூழ் தென்கழனி தானமர்ந்தே
நந்தா வறிவருளு ஞானகனப் பேரொளியே. 33

போதா வொளி யிருளாய்ப் பேதம்ம பேதமதா
பாரா வசராசரம் யாவுமா யல்லவுமாய்ச்
சீரார் கழனிவளர் தேசிகநின் றண்மலரை
யோரே னுளமதனி லுன்ன வருளுவையோ. 34

அருவென்னுஞ் சீரமல னருளிலதே யானுங்
குருவென்னு முன்னருடான் கூடுமவர் தங்கள்பவ
மருளின்றி யேகுமென மாமறைகள் கூறிடுமேற்
றெருளொன்று நீயருடான் செய்வதுவு மெந்நாளோ.

என்னை யுனதுருவா மின்பாச மாமடுவிற்
பன்னாளு மூழ்கிநான் பதைப்பறவே நிற்பதென்றோ

மின்னார்கண் மாமயலாம் வேலைதனின் மூழ்காமன்
மன்னான வாரியநின் மலர்ப்பாத நண்ணுவனோ. 36

நண்ணுமவ ருக்கெளிய நாதனே தென்கழனிப்
பண்ணவனே வானவரும் பாரதனி லுள்ளவருந்
திண்ணமதா வாண்பெண் ணலியெனவுஞ் செப்பரிய
வண்ணலே நின்னியல்பை யாரறிந்து கூறுவதே. 37

கூறும் பரம்பரனே கூறரிய தற்பரனைத்
தேறும் படியருளுஞ் சீருறுநற் சிற்பரனே
கூறும் மௌனதுருவைக் கூடி யனுதினமுந்
தேறும் படியருளாய் தென்கழனித் தேசிகனே. 38

தேசிகனே தீவினையேன் றீநரக மேயுருவாந்
தாசிமுதற் பற்பலவாந் தையலரை நாடாம
லேசில்பரி பூரணமா மௌனதுருவை யேநோக்க
மாசிலருள் செய்தருளாய் வன்னிவன மாதவனே. 39

மாதவங்கள் சற்றுமிலா மாவினையேன் மாமணியே
யாதரவா யுன்றனையே யடையவருள் செய்கிலையே
லேதநிறை பவசலதி யென்றனக்கே காணியதா
மாதலின்யா னுய்யும்வண மருண்ஞான தத்துவனே. 40

வேறு.

தத்து வங்களுக் கதித தாணுவே
முத்தி ராமலிங் கேச மூலமே
பித்த னென்னை யாண்ட பேரரு
ளத்த னேசுக மான வண்ணலே. 41

அண்ண லேபறி வான நித்தனே
பெண்ணு மாணுமில் லாத பேரொளி
கண்ணா னேபர கழனி நாயக
வெண்ணா மற்றிட வீச செய்திடே. 42

செய்கை யற்றொளிர் தேவ தேவனே
பொய்ம்மை யில்லதோர் பூத நாதனே
மைய லுற்றிட மால்கள் காட்டிடுந்
தைய லார்நசை தான கற்றிடே. 43

அகந்த னிலனை யன்றி யுன்னுருச்
சுகந்த னைநிதந் தோய்ந்து வாழவே
சகங்க டம்மினுன் றங்கி டாமலே
நகங்க டம்மிலே நண்ண வெண்ணுவாய். 44

எண்ண மற்றொளி ரேக நாயகன்
விண்ண வர்க்கரி தான வேதியன்
புண்ணி யப்பொரு ளான புங்கவன்
வண்ண மார்பொழில் வன்னி நாதனே. 45

நாத னம்பரன் ஞான தேசிகன்
வேதன் மாலரன் மேவொ ணாதவன்
போதன் புண்ணியன் புகழு நாவலர்
காத லோடுறுங் கழனி யீசனே. 46

ஈச னேகுண மற்ற வெந்தையே
தேச னேசிவ தீன னேன்பவ
நாச னேசுக நான டைந்திடப்
பாச மானதைப் பாற நோக்கிடே. 47

நோக்கு தற்கரி தான நுண்மைய
வூக்க முற்றொளி ரொப்பி லாத்தவ
மாக்க ளுக்கெளி தாக மன்னிய
மோக்கம் யானுற மோன நாடிடே. 48

நாடு மன்பருக் குரிய நாதனே
யீடி லாததென் கழனி யீசனே

வீடு விட்டுநான் வீட டைந்திடப்
பீடு டைக்குரு தேவ பேணிடே. 49

பேணு வோர்தமைப் பித்த னாக்கிய
மாணா னேபவ வாரி நீக்கிடுந்
தோணி யேசுக சோதி யாகிய
வேணி யேயுனை மேவ வோதிடே. 50

வேறு.

ஓது தற்கரி தான பூரண வொப்பி லாதநின் னுரு
வை நாடியே, மாது யர்க்கட ருண்டி மேலதாம் வாழ்வி
னைப்பெறு மாத வத்தர்கள், பேத மற்றநீ நானெ னத்தி
னம் பேணி நின்னையே யெய்தி வாழ்ந்தனர், சாத மற்
றொளிர் தாணு வேயுனைத் தவமி லேனுமென் றடைய
வெண்ணுவாய். 51

எண்ண மோடுவாக் கியாவு நாடிடா வேக னேபர
போத பூரண, நண்ணு மன்பர்தங் கவலை தீரவே நான்ம
றைப்பொரு ளான நின்னையே, மண்ணின் மேற்குரு
வாகி வந்துநீ வழங்கு கின்றதான் மாம றைகடாம்,
புண்ணி யக்கொடை யாள னென்றுனைப் போற்றி
போற்றியென் றேத்து நாளுமே. 52

ஏத்து வோர்கடம் மின்ன லானவை யெண்ண
லற்றவா யிருக்கி னும்மொரு, மாத்தி ரைக்குளே
நீக்கி யாண்டருண் மாசிலாமணி யான வையனே,
பாத்தி ரந்தன தத்த மாகவே பற்று நற்றுற வுற்று
நித்தமுங், காத்தி ரங்களை நீக்கி யென்னையே காண
வுன்னுவாய் கழனி நாதனே. 53

நாத னேதின நாய்கள் போலவே நாரி மார்தமை
நாடி நின்னது, பாத தாமரை தேடி டாதநான் பரம

வின்பமென் றெய்து வன்சொலா, யாத னேபரி சுத்த நித்தனே யத்த னேயரு ளான மூர்த்தியே, வேத னே சுக மான வெந்தையே விமல னேபர கருணை யாளனே.

கருணை யேயொரு வுருவ மாகியே கழனி தங்கிய கார ணனே, மருள ளாகிய வெனது புன்மன மருவ வுன்னியே நெக்கு நெக்கதா, யுருகும் வண்ணமென் றருளு வாய்மிக வொப்பு மிக்கிலி யான வீசனே, யிரு மை யின்பமும் விடம தாகவே யெண்ணு வோர்தமக் கினிய தேவனே. 55

தேவ ருந்தொழு தேசி கேசனே சீவ னீசனுஞ் சகமு மானவர், மூவ ரும்புகழ் கழனி நாதனே மோக மற்றுனை நாடி யுய்வனோ, பாவ மேமுத லான துர்க் குணப் பகுதி விட்டுநற் சாந்த மானதை, யாவலோ டுறு மன்பர் தங்களுக் கறிவ ளித்திடு மாதி தேவனே.

ஆதி யாகிமற் றந்த மாகியென் னறிவு மாகியென் னுயு மாகிநிர்ச், சோதி யாகியே தோற்று கின்றநின் றுணைய டிதனிற் றாய்தி லேன்மனக், கோதி லாமலே கூடி யின்புறக் குழக னேயருள் செய்வ துன்கடன், னோதி யேசுக மான துய்யனே யொப்பி லாவருள் செய்யு மையனே. 57

அய்ய னேயரு ளத்த னேபர வரத னேநிறை ஞான தேவனே, துய்ய னேபுர மூன்றை யுந்தனி தோற் று வித்தரு டொன்மை யாளனே, மெய்யை மெய் யென நாடி டாமலே மெய்யை மெய்யென நாடி யுய் வனோ, தைய லார்மய றங்கி டாதவர் தங்கு வன்னியிற் றங்கு மீசனே. 58

ஈச னற்றுற வுற்று நிட்டையை யெய்த வேண்டு மென் றெண்ணு முன்னமே, பாச மேயுரு வான வென் மனம் பற்று கின்றபல் லிச்சை யானித, மூசல் போல வே யுழல வெண்ணிடு லோய்ந் திருக்குநா ளென்று தான்கொலோ, நாச மற்றொளிர் வன்னி தேவனே நாக ருக்கரி தான மோனனே. 59

மோன மேயுரு வான காரண மேர்க மற்றொளி ரேக பூரண, ஞான சோபன மான புத்தனே நாச மில் சுக சுத்த முத்தனே, யீன மாகிய வாத னைகளை யேக வேயரு ளியோக நாயக, தீன னேன்பவந் தீர்ப்ப துன் கடன் றேவ தேவனே மாசி லீசனே. 60

வேறு.

மாசி லீசனே மன்னுமைம் புலனையு மாய்த்து
நீச னேனுனை நினைவற நினைந்திடும் படிக்கு
நாச மற்றொளிர் தேவனே நண்புட னருளாய்
பாச முற்றவர்க் கரியனே பரமதே சிகனே. 61

தேசி கேசனே சிவனு மீசனுஞ் செகமு
மாசி லாதநின் னுருவதா வதிந்திடு மானுற்
பாச மாயதிற் பற்றலும் விடுதலுந் தகுமோ
நாச மற்றநின் னுருவதா நாடிட வருளே. 62

அருளி லாமுழு லோபனு மடியனை மிகவும்
பொருள தாகவே யாண்டருள் புண்ணியப் பொருளே
தெருளி லேனகத் துறவினைத் தீரமாய்ப் பெற்று
மருளி லாமலென் னுருவினை யறிந்திட மதியே. 63

மதித னக்கரி தாகிய தத்துவ மணியாய்
விதிமு தற்பல கீடமாய் விளங்குபே ரொளியாய்க்

கதிகள் வேண்டினோர்க் களித்தருள் கருணையங் கடலா
திதிபெ ருங்கழ னிப்பதித் தேவனே திகழ்வான். [யத்

திகழு மன்பர்தங் கவலையை யறுத்தரு ளுருவே
யிகழு மாசையை யுடையவர்க் கரியவின் னமுதே
புகழும் வன்னிமா வனத்தினிற் பொலிந்தபுண் ணியனே
யிகழ்வி லுன்னைநா னடைந்திட வருளுநா ளென்றோ.

என்று நின்னது பூரண வுருவமே யிலங்க
வொன்றும் வேண்டிடா வரமெனக் குவத்தலோ டருளி
மன்ற லானது மனத்தினி லெழாவகை செய்வாய்
நன்று நீதரு நாதனே கழனியி னிறையே. 66

இறைக ளுக்கரி தாகிய வினியகற் பகமே
மறைக ளும்மினந் தேடியு மறிந்திடா மணியே
நறைக டங்கிய சோலைக ணண்ணிய கழனிக்
கிறைவ னேயுனை யேத்திநெக் குருகிட நினையே. 67

நினைவி னுக்கரி தாகிய நின்மல விறையே
யனையி னும்பரிந் தாண்டரு ளின்னையே நினைந்து
கனிவு றும்படி கடையனே னுளத்தினைச் செய்வாய்
தனிய னேபல தத்துவங் கடந்ததற் பரனே. 68

பரம தாகிய நின்னுரு நினைந்திடும் படிக்கே
யிரவி போலொளிர் தேவனே யென்றுநீ யளிப்பாய்
புரம தின்க்ரி யாகிய வென்றனை மறைக்குந்
திரம தாமிரு ளர்ந்திட வருளுவாய் சிவமே. 69

சிவன யன்றிரு மான்முத லானதே சிகனே
பவம கன்றிடும் படிக்குநற் றியானமே செய்து
துவம தாகிலே துன்னிட வருண்மிக வருளாய்
சமவ தாஞ்சுக நாதனே ஞானநன் முனியே. 70

வேறு.

முனிவுற்ற சிந்தை தனைமிக்க நல்கு முரனுற்ற வாறு சமயத்,துனிவுற்ற தன்மை யதைவிட் டொழிந்த துகளற்ற சோதி முதலே, தனியுற்ற நின்னை மனமற்ற நிட்டை தனிலெய்தி வாழ வருளாய், கனிவுற்ற வன்பர் நிறைவுற்ற வன்னி நகருற் றமர்ந்த கடலே. 71

கடலற்ப மென்ன நிறைவுற்ற வாசை கழிவுற்று நீங்க மிகவுங், கெடலற்ற நின்னை மடமற் றறிந்து இளர் நிட்டை யோடு தினமுந், திடமுற்று றைந்து னடியார்க ளோடு திரமுற்று வாழ வருளாய், சுடருற்ற வன்னி நகருற்ற ஞான சுகரூப மான பொருளே. 72

பொருள்வைத்த சேரி தனினுற்ற போத புகழுற்ற ஞான குருவே, யிருளுற்ற சிந்தை தெளிவுற்று நாளு மிணையற்ற நின்னை யடையச், சுருளுற்ற மாதர் மருளுற்ற லைந்த துயரென்று நீக்கி யருள்வாய், தெருளுற்ற மோனர் நிறைவுற்ற வன்னி திகழுற்ற தேவ சிவமே.

சிவசத்தி னந்த மதிலுற்ற மோன திகழுற்ற கற்ப தருவே, யவமுற்ற சொல்லை யலறித் திரிந்து மருளற்ற சிந்தை யுடனே, தவமற்றி ருந்த தமியே னுயர்ந்த தனையென்று நாட வருளாய், நவமற்ற ஞான தவருற்ற வன்னி நகருற்ற யோக பரனே. 74

பரமாகி நிற்றி யுயிராகி நிற்றி பழுதுற் றமர்ந்த சகமாந், தரமாகி நிற்றி யுரமாகி நிற்றி தனியாகி நிற்றி தமியேன், றிரமா யறிந்து புகழ்கின்ற வாறு தெரியே னுயர்ந்த முனியே, வரமான வன்னி வனமுற் றமர்ந்த மணியே மயக்கை யொழியே. 75

ஒழிவுற்ற சிந்தை தனையுற்று வாழு முரவோர்கள் போல நிதமும்,பழியுற்ற சிந்தை தனையுற் றமர்ந்த படிறேனும் வாழ வருளா, யழிவுற்ற சித்தி தனைநாடு மீன ரறிதற் கொணாத விறையே, பொழிலுற்ற வன்னி நகருற் றமர்ந்த புகரற்ற ஞான குருவே. 76

குருவாகி யன்ப ருருவாகி யோது குறைவற்ற வேத மவையா, யருவாகி மற்று முருவாகி ஞான வரனு யயன்ற னுருவாய்த், திருவாகி மாற னுருவாகி நின்று திகழ்கின்ற சோதி மயமே, முருகான வாறு புடைசூழும் வன்னி முதலே சுகத்தை யளியே. 77

அளிதங்கு சோலை தனிலுற்ற புஷ்ப மதிலுள்ள தேனை யணுவாக், களிகொண் டருந்து முறையென்ன நல்ல கறையற்ற தீர துறவுற், றொளிதங்கு பிச்சை தனையுண்டு நிட்டை யுறவாக வெய்த வருளாய், வெளியென்ன வெங்கு நிறைவுற்ற ஞான வெளியான மோன முதலே. 78

முதலான வுன்னை யணுநேர மின்றி முரணற்ற சிந்தை தனிலே, ததலா நினைக்க வரமே யளித்தி சனகா திபர்க்கு னுருவை, யிதமா யளித்த குருவே யெவர்க்கு மிறையான சுத்த வெளியே, சிதமான சிந்தை தனிலே நிறைந்து திகழ்கின்ற தேசு மயமே. 79

மயமற்ற தன்ன துருநாடு வோர்கண் மனமான நல்ல முளரிக், கியமுற்ற சண்ட னெனநின்ற ஞான வினையற்ற சோதி வடிவே,சுயமுற்ற நின்னை மயலுற்ற மோக துகளுற்ற நானு மடைய,வியமுற்ற வன்னி வனமுற்ற சுத்த விமலா விருப்பொ டருளே. 80

வேறு.

அருமை யானநின் றிருவடி யடைந்திட வனுதின் நினையாத, கருமை யானவென் னுளத்தினீ விளங்கிடக் கடைக்கணு லருள்செய்வா, யிருமை யின்பமு மிட ரெனத் துறந்தவ ரிருடனை யறமாற்றி, யொருமை யானதன் னுருவினை யளித்தரு ளுயர்பர குருதேவே.

தேவ யான்மனை மக்களை மனைவியைத் திருவினைப் பெருவாழ்வை, மூவ ரானவர் பதங்களை முன்னுறு முனிவர்க ளடிமேவி, யாவ லாயவ ரேவலை மிகச்செய வடியனேற் கருள்செய்வாய், தாவ மற்றநற் றவத்தவர் சூழ்ந்திடு சமிவனப் பதியானே. 82

பதிமு தற்பல வுயிர்களுஞ் சகங்களும் பரமென வறியாத, மதியு டைப்புலைத் தமியனே னவைகளை மறந் திடுஞ் சுகநிட்டைக், கதித னைப்பெற விரும்பினே னிறைவநின் கடைக்கணு லருள்செய்வாய்,விதிநி டேத மற் றொளிர்சிவ பரமனே விமலவெங் குருவாழ்வே. 83

வாழ்வி யாவையும் வழியினிற் றுரும்பென மதித் திடு மறிவுள்ளோர்,தாழ்வி லாமலே தனைமிக வறிந்திடுந் தவத்தரா யிருப்பாரேற், கீழ்மை யாகிய மகளிரைக் கருதிய கெதியிலேன் றவமென்னே,சூழ்த லற்றநின் னுரு வினை யடைந்திடத் தூயனே யருள்செய்வாய். 84

செய்ய சிற்சுக வமிர்தினைத் தினந்தொறுந் திகைப் பற நுகராமற், குய்ய மானதின் மிகுசுவை யிருப்பதாக் குறித்தவென் மதியென்னே, தைய லார்மய லணுவி லா திரிதரச் சயம்புவே யருள்செய்வாய், வைய மான திற் சிறந்திடு கழனியில் வயங்குநற் பரதேனே. 85

தேனும் பாகுமுக் கனிகளுங் கண்டுடன் சீனி யுந் துவர்த்தேக, வானம் போலவே யருவமா நீயுரு வாகிநின் றெடுத்தோது, மீன மற்றவாக் கமுதினை யருந்திநே ரினிச்சுக முறவெண்ணார், பூன லார்கழ னிப் பதி மேவிய பரமனே பழையோனே. 86

பழைமை யாயெனை மறைப்பதா மிருடனைப் பரம நின் னருளான, குழைத லற்றபே ரொளியினாற் றுரத் திடக் குறிக்குநா ளெந்நாளோ, மழைக ளிற்றனி யிரு ந்துநின் னுருவினை முன்னுற வருள்செய்வாய், மழைக டங்கிய மாளிகை சூழ்கரு வன்னிமா வனத்தோனே.

வனம துற்றிடு சிரவண மனனமு மறுவிலாத் தியானங்க, டனம தாகவே தரித்துநற் றனையுணர் தவ த்தர்போன் மிகவேடந், தினமுங் காட்டிய சிறியனே னவங்களைத் தீர்க்குநா ளெந்நாளோ, சனன மஞ்சினர்க் கவருடை முயற்சியே சரணென வுரைத்தோனே. 88

உரையை நீங்கிலே னுலகத னசையறே னுறவின ருறவுற்றேன், வரையி லாமலே பலபல பொருள்களின் மருவிடு மனந்தன்னைப், புரையி லாமலே தடுத்திட நினை கிலேன் புரணனே யென்சொல்வேன், விரையி லாத நற் சமாதியை மிகவுற விரும்புவ தெவ்வாறே. 89

எவ்வ மானவை மிகமிக வளிப்பதா யினமே யுரு வாகிப், பவ்வம் போலெது வருகினு நிறைவிலாப் பண்புட னெனதுள்ளத், தவ்வை யானதே யிருப்பிட மாகவுந் தயங்கிய நசைப்பேயைச், செவ்வை யாகவே யகன்றிடும் படியதாத் தேவனே யருள்செய்வாய். 90

## வேறு.

அருளாரமிர் துருவாகிய வண்ணா வுனையுற்று
மருளாலுட னசைதன்னொடு மானார்மய லுற்றே
பொருளாமெனை யடையாதுல கின்மாளுதல் புகழோ
தெருளேபர துரியந்திகழ் தேவே புகல்வாயே. 91

வாயாற்பல நூலோதனி னென்னே பயனவையை
யோயாதுரை யாமன்னித முள்ளம்மலை வற்றே
நீயாமொளிர் நிட்டைதனி னிலையாயுற வருளாய்
தாய்போலெனை யாளுங்குரு மணியே சகவொளியே. 92

ஒளிதங்கிய மறையானவை யுணர்தற்கரி யானே
வளிபோலுழன் மனதானது மாயும்வகை யருளாய்
தெளிவுற்றுனை யறிவார்கட முருவாகிய தேவே
களியாகிய நதிசூழ்திரு கழனிப்பதி யானே. 93

ஆனாவரு ளரசேசுக வமுதேயணு வுருவே
ஞானாகர விறையேயர நலமார்குரு மறையே
நானாவித நாட்டங்களை நாடாவகை செய்வாய்
வானாடரு மண்ணாடரும் வாழ்த்தும்பர தேவே. 94

தேவென்றிடு முனையன்றியோர் தெய்வம்முள வாகப்
பாவம்முடை யவரேநினை வார்கள் பயனற்றே
யேவம்மில தாகும்பல தேவாகிய விறையே
யாவல்லில தகதாமரை யாருஞ்சுக வளியே. 95

அளிதங்கிய மலரின்மண மெனவேநிறை வானே
யொளிதங்கிய கனலியென வொளிருஞ்சுய சோதி
மிளிர்தங்கிய மோனச்சுக மிகவும்முற வருளாய்
தளிர்தங்கிய சோலைமிகு சமிதங்கிய சிவமே. 96

சிவமேயெனை யாளும்பர தேவேபல விடயத்
தவமேயுழல் வதுதன்னொடு மாரும்பெரி தாக
நவமாவெனைப் பேசும்படி நாடும்மது நலஞே
வுவமானம தில்லாவுனை யுன்னும்படி நினையே. 97

நினையேநித நினையும்வண நேசம்முட னல்கி
மனையாதிய ருறவானதை மாற்றியெனை யாள்வாய்
தனையேகன மெனவேயரு டாயேசுக தருவே
கனையேயுயர் பேறேதனி கழனிப்பதி யிறையே. 98

இறையேமன மோடித்தின மெங்குஞ்சுழல் வுற்றே
குறைவேயுற லழகோவிது கூறாய்சுக வாழ்வே
மறைபோற்றிடு மன்னேமக பதியேநிறை மதியே
யறைகின்றதோர் கழனிப்பதி யமருங்குரு பரனே. 99

பரமேநினை நினைதல்லுடன் பாங்காத்தொழு தேத்த
வரமேமிக நல்காய்திர மறையின்பொரு ளான
வுரனேவுயர் பேறேதனி யொன்றாகிய சிவமே
தரமில்லெனைப் புரிந்தாண்டரு டாயேபர சத்தே. 100

பதிற்றுப்பத்தந்தாதி முற்றுப்பெற்றது.



## 2. போற்றிக் கலிவெண்பா.



காப்பு.

அன்னன்முத்தி ராமனெனு மத்தனுஞ் சற்குருமே
னண்ணும் பரவடிவை நானடையப்—பண்ணுதமிழ்
சுந்தரமாய்த் தான்முடியத் தோகைமயில் வாகனனுங்
கந்தனுக்கு முன்பிறந்தோய் கா. 1

## நூல்.



நான்முகனு நாரணனு நண்ணார் புரமெரித்த
பானிறமாம் பண்ணவனும் பண்ணவரு—மேனாளி
னடியே தாமலைய நான்மறைக டாந்தேடிப்
பாடியே நின்று பலபிதற்ற—வாடியெ
னெஞ்சந் தெளிந்த நிமலர்களுந் தாமயங்க
வஞ்சகமே யோருருவாய் வாழெனது—புஞ்சப்
பிறவிகெட வேயருளப் பேரருளான் மன்னு
முறவாக வோருருவை யுற்றுக்—குறைவிலா
மண்ணிலே மானுடனாய் வந்தபெரு மானேயுன்
திண்ணிதாஞ் சேவடியைத் தீயனே—னண்ணி
யுடலமெலாங் கண்ணா வுருகே னழியேன்
றொடரலைபோல் வாயாற் றுதியேன்—கடனெனவே
பேரறிவைத் தானளித்த பெம்மானே நின்புகழை
யூரறிய வெங்கு முரைத்திடேன்—பாரதனில்
வேரேன் விதிர்விதிரேன் மெய்சோரே னின்னருளைப்
பாரேன் வியவேன் பதைத்துருகே—னூரறிய
வாண்ட முத்தி ராமனெனு மத்தனே யென்றரற்றேன்
மாண்டபுகழ்ச் சேவடியின் மன்னிடே—னீண்ட
குறிகடமி லொன்றுங் கூடிடநான் காணே
னெறியலாத் துர்க்குணமே நேர்ந்தேன்—குறைவிலாப்
பூரணமே யுன்னைப் பொருந்தும் வகையறியேன்
றாரணிமேல் வந்ததிருத் தாள்போற்றி—காரணமா
மத்தனே போற்றியறி வானந்த னேபோற்றி
முத்தனே போற்றிமுனி யேபோற்றி—பித்தையுறு

பேயனைய வென்னுடைய பேர்மாயு முன்னாகத்
தூயவுளங் கொண்டருளுஞ் சோதியே—யாய்போ
லடியார்க் கிரங்கு மருட்கடலே போற்றி
கொடியேனைத் தேடுங் குருவே—முடிவிலா
மேலோனே போற்றிமிகு வேதகமே தாள்போற்றி
நாலாம் பதங்கடந்த நாயகமே—காலாகி
வானறலாய்த் தீமதியாய் மண்கனலி சிவனுமா
யானு லவையிலனு மாதியே—வானவரு
நாடற் கரிதான நாயகனே தாள்போற்றி
தேடற் குரித்தான தேசிகனே—பீடுடைய
தென்கழனி யூரினில்வாழ் தேவனே போற்றிதிரு
வன்பரக மாமலரி னாளியே—யென்பொனே
தேனே கனிரசமே தீங்கரும்பி னற்சுவையே
யானாத கற்கண்டே யாரமுதே—யூனமிலா
வானந்த மாமலையே யாரியநின் றாள்போற்றி
வானந் துதிக்கவரு மாதவமே—ஞானகன
சத்தியனே போற்றிசுக தாரகமே போற்றிமுழு
வித்தகனே போற்றியொரு வேதியனே—பத்தர்கடந்
தாயே தமரே தமியே னுயிர்த்துணையே
நீயே முழுதுமாய் நின்றோனே—மாயாத
வம்பரமே யம்பரங்க டாமடங்கு மாலயமாஞ்
செம்பொருளே போற்றியிருந் தெய்வமே—நம்புமவர்
போற்பில் பிறவியெனும் புன்பிணியை நீக்குதற்குச்
சிற்பரபண் டிதனாகுந் தேவனே—கற்பகம்போற்
றன்னை யளித்ததலை வள்ளலே தாள்போற்றி
யென்னை வலிந்தாண்ட வின்னமுதே—நின்னையே

நாடாத வர்க்கெல்லா நல்லிருளே நாடினர்க்கு
விடாத பேரொளியே மெய்ப்பொருளே—சேடார்நற்
சோதியே போற்றி சுடரொளிக டோற்றுவிக்கு
மாதியே போற்றிநிறை வானவனே—கோதி
றுரியந் தனில்விளங்குஞ் சுத்த சுகமான
வரியபொரு ளேபோற்றி யாரமுதே—பிரிவிலாத்
துன்பத் தழுத்துவிக்குந் தூயதிலா வாசைகளை
யின்பத் துறவான வேர்வாளால்—வன்பி
லறுப்பார் கடங்க ளகத்திற் றிடமா
மறப்பிலொளி யாவிளங்கு மன்னே—சிறப்புடைய
சுத்தமுத்தி ராமலிங்க தூயனே போற்றிகமழ்
மத்தனு மென்றலையில் வைத்தவனே—நித்தனே
மாலுடைய வென்பவத்தை மாய்த்தவனே போற்றிமறை
மேலான வாக்கியத்தின் மெய்ப்பொருளே—நாலான
சாதனங்க டாமடைந்து சற்குருவி னற்கரத்தின்
மாதனமோ டாவியுடல் வண்மையதாக்—கோதில்
கொடுக்க வவனருளாற் குற்றமிலாத் தன்னை
நடுக்க மறவருள நந்தா—விடுக்கணறு
சிந்தனைக டாஞ்செய்து சிந்தனைக ளொன்றுமிலா
நிந்தையிலா நிட்டைதனை நேர்ந்திருக்கும்—புந்திதனில்
வெட்ட வெளியாக வேறிலா தேவிளங்குந்
தட்டிலா நின்மலநின் றாள்போற்றி—மட்டார்
மலரின் மணமென்ன வானமுத லாவெங்குங்
குலவி நிறைந்தபெருங் கோவே—நிலையுடைய
தற்பரனே போற்றிசிவ சங்கரநின் றாள்போற்றி
யற்புதனே போற்றி யடிபோற்றி —யுற்பவமற்

றோங்கும் பரமதனை யொப்பிலா மாமலரோன்
றீங்கிலாத் தேவர்கடாந் தேர்ந்திடவே—பாங்காக
வோத வலதின்றி யோர்மழுவைத் தானேந்தச்
சிதரனும் பார்த்தனுக்குத் தேர்மிசையே—யாதரவா
யீரொன் பதுதடவை யேரறிவைத் தானோதக்
கார்வென்ற கூந்தலுறு காண்மயிலைத்—தாரமதா
விட்டுத் துறந்தும் விமலரென நால்வருக்குச்
சுட்டற் றதையுரைக்கத் தூயவா—னிட்டமுட
னெண்ணற்ற சீவர்களு மெல்லையிலாச் சிற்பொருளை
நண்ணிப் பவமகல நாவதனாற்—றிண்ணமதா
வோர்மொழியே தானுரைத்த வொப்பிலானே போற்றி
வார்மேவு கின்றதன மங்கையரை—யூருரி
னோடித் திரிந்தலைந்தே யுன்னிநோக் காதருளைப்
பாடிப் பலபிதற்றிப் பண்புடனே—பீடுடைய
கூடு முயிருங் குமண்டையிட வேகுனித்தே
யாடி நினதுருவை யாராய்ந்து—நாடரிய
வானந்த மாமடுவி லாழ்ந்ததிருக் கூட்டத்திற்
றீனமற வென்றனையுஞ் சேர்த்தவனே—நானவனீ
தோன்றுமிலா நற்பொருளா முத்தமநின் றாள்போற்றி
யன்றாலின் கீழிருந்த வாரியனே—பொன்றலிலா
நாரணனே போற்றிதிரு நான்முகனே போற்றியரி
வாரணனே போற்றியரு ஐயனே—தாரணியின்
மூதறிவில் லாதவரு மூலமா நின்னுருக்கண்
டாதரவோ டேத்திக்கு மாரியனே—மாதவமி
னாயேன் றலைத்தந்த நற்கமலத் தாள்போற்றி
பேயேன் வினைகெடவே பேணியரு—டூய

விழியிணைகள் போற்றியெனை மேவா தழித்த
விழிவான மூட விகலை—முழுஞான
வாளா லழித்ததிறல் வல்லபங்கள் போற்றிமிகு
கோளான பேதத்தின் கூற்றவே—கோளா
ரலைநுரைக ளெல்லா மலையான வாபோற்
றொலைவில்சக சீவபாத் தோற்ற—நிலையான
வுன்னுருவே யென்ன வுரைத்ததிரு வாக்கமுதி
னன்னலமே போற்றியரு ணயகமே—பின்னமுறு
தேகங்க டாமெனவுஞ் செல்வம் பொருளெனவு
மோக மடைந்தபர மூடருடன்—மூகனுச்
சேர்ந்தே யிருந்தவெனைச் சேரா தழைத்ததிரு
வார்ந்தகர மேபோற்றி யற்புதனே—சார்ந்தறிய
வெட்டானே போற்றிமிகு மேழுகே போற்றிமறை
தட்டானே போற்றிதிருத் தாள்போற்றி—சுட்டுதலில்
பேறிவே போற்றியிரும் பெம்மானே போற்றிபர
மேவுருவே போற்றியிறை யேபோற்றி—சீருடைய
தேவ சிகாமணியே தேசிகநன் மாமணியே
யாவ ஞறுமவரி னாரமுதே—தாவிலொளிச்
சேவடியே போற்றியிருந் திங்க ளுடுநடுவி
லோவலற விளங்கு முண்மைபோற்—றேவர்குழா
மாவ லுறும் வன்னிவன மாங்கழனி நன்னகரிற்
றுவி லடியவர்க டற்சூழ—மேவுதிரு
வானந்த மாமதிமே யச்சுதநின் றுள்போற்றி
யீனம் பலகொடுக்கு மேழையரை—ஞானசுக
வுன்னை நினைமனத்தா னுன்னுணை யும்மருளா
யன்னைமுத லானவரி னசையது—மன்னு
முடலினபி மானமது மோய வருளாய்
விடமெனவே தூர்க்குணமாம் வினை—றுடன்பயின்றே

சேரா மையுமருளாய் தேசிகநின் றுடலையிற்
பேரா மையுமருளாய் பேதையே—னீரா
வுருகி யுனைநினைக்கு முள்ள மருளாய்
குருவான வுன்பணியே கொள்ளுந்—திரமாங்
கரங்கண் முதலாக் கடையேன் பொருந்த
வரமா மிகவருளாய் வாழ்வே—பரமான
நீயேநா னேனீ யென்றுரைத்த நின்னுரையை
யோயா துளமடையு மோர்வருளாய்—வாயாற்
பிதற்றுமன் மோனசுகப் பேருஞ் சமாதி
யிதத்தோ டகமடைந்தே யென்று—மதித்தலுறு
சிந்தனைக ளொன்றுமிலாச் சிற்பரமா யானிருக்க
வெந்தையே நீயருளா யேகனே—முந்தவே
பேதையேன் வேண்டுவரம் பேரா தளித்துவிடிற்
றாதையே நின்பொற் சரணடைவே—னேதமிலாத்
தூய்மையனே சுந்தரனே தோன்ற வருளிலையே
லோய்விலாத் துன்ப வுததிதனிற்—றேய்விலா
தெப்போது மூழ்கி யிருப்பதினி லையமிலைத்
துப்பா முனதடிமை துன்புற்று—விப்பாரி
னுள்ளோ ருனையிகழ்வா ரோராரென் றீமனதை
யெள்ளளவிலா வுன்றனையே யானடைய—விள்ளாது
கேட்ட வரமெல்லாங் கேடிலாய் நீயருளாய்
நாட்டுணையா நின்கமலத் தாள்போற்றி—வீட்டலிலா
மன்னனே போற்றியொளி மாணிக்க மாமலையாந்
தன்னந் தனியனே தாள்போற்றி—யின்னமிலாச்
சிற்கனமே போற்றிபர தேவ சிகாமணியே
சற்கனமே போற்றி திருத் தாள். 78

போற்றிக்கலிவெண்பா முற்றுப்பெற்றது.

# 3. குருபரம்பரைத் துதி.

## ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி.

சத்திய ஞான வனந்தவா னந்த தத்துவ மாய் நிறை யுருவே, சுத்தியா முளத்தை யடைந்தநால் வர்க்குச் சுகமதை யருள்பர குருவே, யத்திபோ லுருகு மடியரி னுளத்தோ டாலினு மமர்சுக தருவே, புத்தி யில் லவனாய்ப் புலம்பியே திரியும் புலையனைக் கடைக் கணா லருளே. 1

## ஸ்ரீ சங்கரபூஜ்ய பகவத்பாதாசாரிய சுவாமிகள்.

சகத்தினி லுள்ள சீவர்க டமக்குத் தவறிலாத் தனதுரு வான, சுகத்தினை யருளக் கருதிய வதுபோற் றுகளிலா நாமமும் பெற்றே, மகத்துவ மில்லா மதமெ லா மழித்து மாறிலத் துவிதமா னதையே, யகத்தினிற் கருத நிறுத்திய குருவே யடியனே னின்புற வருளே.

## ஸ்ரீ வித்தியாரண்ய சுவாமிகள்.

வேதனே வேத முடிவினில் விளங்கும் விமலவச் சுதபர வெளியே, நாதனே யடியர் பவத்தினை யறுக்க நணுகிய ஞானதே சிகனே, யாதனே வித்யா ரண்ணிய ஞன வமலசிந் தாமணி நிதியே, யெதமில் லறிவை யே ழையே னடைய வேகனே மிகவரு ளாயே. 3

## ஸ்ரீ சுப்ரமண்ய ஞானதேசிகர்.

நித்தனே முத்த பரவெளி யான நின்மலா னந் தவா ரிதியே, யத்தனே யசைவி லுளமதாங் குகையி லமர்ந்திடு குகேசனு மறிவே, சுத்தனே பரனே சுயம் பிர காச சுப்பிர மணியதே சிகனே, மத்தனு மெனை யாண் மாசிலா மணியே மாதரின் மயக்கறுத் தருளே.

## ஸ்ரீ நயினப்ப ஞானதேசிகர்.

சீவனும் பரனுஞ் செகங்களு மான சின்மயா னந்த தத் துவனே, நாவலர் பரவி யறிந்திடற் கரிய நயி னதே சிகவருட் கடலே, சாவதும் பிறப்புங் கனவிலும் பொருந்தாத் தனையெனக் களித்தவென் னரசே, தாவ மே யுடைய குடும்பமாந் தளையைத் தமியனே னறுத் திடக் கருதே. 5

## ஸ்ரீ அழகப்ப ஞானதேசிகர்.

செற்ற ராகமது சற்று மின்றியொளிர் தேவ நாயக சிகாமணி, யற்ற மற்றவழ கப்ப வீசவெனை யாண்ட ஞானகுரு தேசிக, குற்ற மற்றதுற வேய டைந்துமலை குகைக டம்மிலசை யாமலே, பற்று முற்றுமற ஞான யோகமது பற்றி யானடைய வருளிடே. 6

## ஸ்ரீ வீரபத்திர ஞானதேசிகர்.

வித்த கர்க்குமரி தான தற்பரம வீர பத்ரகுரு தேசிக, புத்த தாணுபர மார்த்த சத்யபர போதமே கரு ணை வாரியே,முத்தி யானவெனை யன்றி யோர்பொருளு முன்னு ருதபர யோகெனுஞ், சித்தி யானடைய முத்த மானபர தேவனே யருளு வாயரோ. 7

## ஸ்ரீ முத்தைய ஞானதேசிகர்.

உத்தம மாமுத் தையதே சிகனே யொப்பிலாக் குணபருப் பதமே, பத்தர்க டமது துயரொனு மிருளைப் பாற்றிடு ஞானசூ ரியனே, சுத்தமா மெனையே மறைத் திடற் குரித்தாந் தூய்திலா விடயவா சனைக, ணித்த முந் தோன்று திருந்திடும் படிக்கு நிமலனே யருளுவா யன்றே. 8

## ஸ்ரீ உகந்த ஞானதேசிகர்.

ஞானநன் மணியே நற்றவப் பயனே நன்கொடு தீங்குமில் லவனே, வானவர்க் கரிய பொருள்வைமா நகரில் வதிந்தரு ளுகந்ததே சிகனே, யீனனேன் மனத் தி லெழுந்திடு நினைவா யிருடனை நினதரு ளான, மான மாங் கதிராற் கரந்திட வருளாய் மாசிலா னந்தசற் குருவே. 9

சரியையுங் கிரியை தன்னுட னியோகந் தங்கிய பக்குவர் தமக்குத் தரணியின் ஞான மளித்திட லரி தோ சாற்றிய சாதன மிலவாய், வரிநெடுங் கயற்கண் மனைவியுங் கனக மகவுமே பொருளென நினைந்து மரு வியே மரண சனனமாஞ் சுழலில் வதிந்திடும் பாதக னெனினு, மரியய னரனு மறிந்திடற் கரிதா யடியவர்க் கெளியவா நினது வம்புயந் தன்னை யடைந்திடு மவரி னகவிரு ளகலவே யருள்வோய், பொருவரு மருளைப் பொழிந்திடுங் கனமே புரணமாஞ் சுகமரு டருவே பொருள்வைமா நகரி லின்பமே யுருவாய்ப் பொருந்திடு முகந்ததே சிகனே. 10

## ஸ்ரீ முத்திராமலிங்க ஞானதேசிகர்.

சித்தரு மவாவுங் கழனிமா நகறிற் றிகழ்ந்திடு ஞானதே சிகனே, முத்தரு மறிதற் கரியனே முத்தி ராமலிங் கேசனு முனியே, புத்தமு துவர்க்கப் பரம மாய் விளங்கும் பூரண சுகமதே யுருவாய், வித்தகர்க் குரிய வசைவிலாச் சமாதி விரகிலேற் களித்திடென் னரசே. 11

சுத்தமாய்ப் பரமாய் விளங்கிய வொளியாஞ் சுப் பிர மணியவா ரியன்றன் றாய்மலர்ப் பதமுந் துகளிலா

நபின விறைவனின் றுணேயடி தனேயு, மத்தமி லறிவே
யுருவழ கப்ப வடிகளின் சரணமு மசைவி லகண்ட
மாம் வீர பத்திர வீச னங்கிரி தன்னேயுஞ் சுகமா, யுத்
தம மாமுத் தையசா மியினி ளெளிவிலாப் பாதமு
மூரமா முகந்தேத சிகனற் றுள்களு மெனேயா ளொப்
பிலா னந்தவா ரிதியா, முத்தனு முத்தி ராமலிங் கையன்
முளரியங் கழலேயு முடிவின் மூரணறத் தினமு மனத்
தினு ளிருத்தி முறைமுறை யிறைஞ்சிவாழ்த் திடு
வாம். 12

குருபரம்பரைத் துதி முற்றுப்பெற்றது.



## 4. காரணற்காணுக் கரணத்திகழ்ச்சி.



சாதன நிறைந்த மேலாந் தவத்தினர் தேடா நிற்க
மாதரின் வசமே யான மருளனே னுய்யும் வண்ணம்
பூதலந் தன்னில் வந்த புனிதனே நினேந்து நாளுங்
காதலோ டுருகா நெஞ்சங் கற்களோ வறிகி லேமால். 1

மனமொடு வாக்குக் கெட்டா வத்துவை யருளா
நின்ற, புனிதனேப் பாடிப் பாடிப் புகழ்ந்திடா வாக்கும்
வாக்கே, கனியென வமிர்த மூறுங் கருணேயன் வசனங்
கேளாத், துனியுறு செவியைப் பாவைத் துளேச்செவி
யென்ன லாமே. 2

சிரம்பல வாலும் வேதந் தேடிநின் றயரத் தேவர்
திரம்பட நாடி நாடித் திகைத்திடப் புவியின் வந்த
பரன்றனே வலம தாகப் பலதரஞ் செல்லாக் கால்க
டிரம்பெறு மாத்தி ரூலே செய்திடுங் கால்வே றன்றே.

இயாவினும் கீழா கின்ற வியாக்கையைத் தானென் றெண்ணும், பாவியா மெனையுந் தேடிப் பத்தரோ டாள வேண்டி, நாவினால் வழுத்த வொண்ணு நலம் புனை வடிவங் கொண்ட, தேவினைக் காணுக் கண்கள் செத்தசக் கண்ணே வென்னே. 4

காரணற்காணுக் கரணத்திகழ்ச்சி முற்றுப்பெற்றது.

## 5. மனோரதம்.

வன்னிமா வனத்திற் றன்னை வழங்கிடும் வள்ள றன்னைச், சென்னியால் வணங்கி நித்தந் தீயிடு மெழு கே போல, வுன்னியே நெக்கு நெக்கா யுருகிட வுடல மெல்லா, மன்னியே மனம தாக வதிந்திடப் பெற்றி லேனே. 1

வடிவொடு நாம மற்ற வத்துவே யுருவ தாகி, நெடியவன் முதலோர் வாழ்த்து நிகரிலாக் கழனி தன் னிற், செடியனு மெனையு மாட்கொ டேவினைத் தின் முன் காண, வடிமுதன் முடியீ ருக வருங்கணுப் பெற்றி லேனே. 2

ஆசையே முதலாந் தீய வனந்தமாங் குணங்கள் பற்றிக், காசறு தன்சொரூபங் கனவினு மறியா வென் றன், பாசம தறுத்து நீயே பரமென வருளா நின்ற, வீசனைப் பாட வாய்க ளெங்குமாப் பெற்றி லேனே. 3

மனைவியு மகவும் பொன்னு மருவிய குடும்பச் சேற்றிற், றினந்தொறுஞ் சுழன்று நைந்து தீரா கழுந்து வேற்கு, மனகமாம் பதத்தை நல்கு மமலநின் கீர்த்தி தன்னைத், தினந்தொறுங் கேட்க வெண்ணுச் செவிகள்யான் பெற்றிலேனே. 4

தேவர்கண் முதல்யா ராலுந் தீர்ப்பதற் கரிய பந்தம், பாவியே னுறுது மாற்றிப் பரிந்தருள் செய்த தேவைத், தாவிலாக் குணத்தின் குன்றைத் தரணியின் வலஞ்செய் தற்கே, யாவன கால்க ளின்ன மனந்தமாப் பெற்றி லேனே. 5

மனோரதம் முற்றுப்பெற்றது.



## 6. இறைவல்லபம்.



முற்று மொழிவற நின்ற பழம்பொருண் மூர்த்தியாய் வந்திடவுஞ், சுற்றும் பவத்தின் றொடர்பைக் கரிசறத் தூரமா நீக்கிடவுஞ், சற்று மறிவி றமியேனைத் தானாகத் தானே புரிந்திடவும், பற்று தெறுஞான தேசிகர்க் கல்லது பகவனாற் செய்யலாமோ. 1

தீமுற்று சிந்தைச் சிறியேனைப் பூமியிற் றேடிவந் தாண்டிடவுங், காமுற்ற வின்பக் கடலிற் குளிக்கக் கருணைக்கண் ணோக்கிடவுந், தோமற்ற வேதந் தொடராப் பொருளினைச் சொல்லா லளித்திடவு, மாமுத்தி ராம குருவினார்க் கல்ல தயன்றனாற் செய்யலாமோ. 2

பூன்றமாந் தன்ன துருவிற் குறைவின்றிப் பூமியின் வந்திடவு, மூன்றற வேழைந்து முன்னுரு வல்லென வோதி யொழித்திடவுஞ், சான்றசற் சிற்சுக நீயே பொருளெனத் தானே யளித்திடவு, மான்ற குருவினார்க் கல்ல தறிதுயி லண்ணலாற் செய்யலாமோ. 3

பந்த விகாரங் கெடநல் லருளொடு பார்வைகள் செய்திடவு, மந்தமொன் றின்றி யிருக்குஞ் சுகத்தை

யடியார்க் களித்திடவுந், தந்தை முதலாந் தமரிற் சுழ லென் றனக்கருள் செய்திடவு, முந்து கழனிக் குருவி னூர்க் கல்லது மூவராற் செய்யலாமோ. 4

வடிவற்ற வன்வடி வாகி யடியர் வடிவைக் கரைத் திடவு, மொடிவற்ற தன்னை யுளங்கையி னெல்லியி னொப்ப வளித்திடவும், படியற்ற தானே படிவங்க ளெல்லாம் பரமென் றுரைத்திடவு, முடிவற்ற நாதனுக் கல்ல தமரர் முனிவராற் செய்யலாமோ. 5

இறைவல்லபம் முற்றுப்பெற்றது.



## 7. போற்றிமாலை.



ஞாலமுயிர் பரமொன்று மில்லை யென்று நான்ம றையின் முடிவதனில் விளங்கா நின்ற, காலமொடு தே சமுதல் வத்து வெல்லாங் கழன்றபரி பூரணமாஞ் சொரூப நீயென், றுலமெனத் துர்க்குணனு மென்ற னக்கு மருள்செய்த நின்கருணைக் களவோ போற்றி, மூலமெனக் கரியழைக்கத் தானே வந்த முத்திரா மக் கனியே போற்றி போற்றி. 1

வேதமுதன் முனிவர்களுந் தேடிக் காணு மெய்ப் பொருளே யடியர்பவ நீக்கவேண்டி, யோதரிய கழனி நகர் தனிலமர்ந்த வுத்தமனே மத்தனுளத் துணர்வே போற்றி, யேதமுடன் விடயத்தி லுழல்வே னுக்கிங் கிதனைத்துஞ் சொரூபமென விசைத்தாய் போற்றி, மூதுணர்வே வடிவாக வமர்ந்து நின்ற முத்திரா மக் கனியே போற்றி போற்றி. 2

அன்னையினு மினியானே போற்றி போற்றி யார ணங்கள் கடந்தபெரும் பொருளே போற்றி, யென்னையு மோர் பொருளாக வாண்டு கொண்ட வென்னுயிரே யின்னமிர்தே யிறைவா போற்றி, சின்னமிலா தொன் றாகித் தானே நின்ற சிதாகாச சொரூபநீ யென்றிசை த்த, முன்னவனே தற்பரனே போற்றி போற்றி முத் திரா மக்கனியே போற்றி போற்றி. 3

நினைவதனிற் சகசீவ பரங்க ளெல்லா நின்றெழுவ தாலந்த நினைவே யன்றிக், கனவினுமே வேறாகா தத னூற் றன்னிற் கற்பிதமா மந்நினைவுந் தனில்வே றில்லை, யெனவுமெனக் கருள்செய்த பொருளே போற்றி யேக பர வடிவான நாதா போற்றி, முனமமரர் தேடியுமே காணா நின்ற முத்திரா மக்கனியே போற்றி போற்றி.

பதுமமுறை யயனரியோ டரனு மாகிப் பகர்மூவ ரதிட்டான மானாய் போற்றி, யதுவிதுநா னவனென்றே விகற்பிக் கின்ற வலமனதா யதின்சாட்சி யானாய் போ ற்றி, பதுமன்முதற் கீடவரை யுயிர்க ளியாவும் பழுத ற்ற சின்மாத்ர மென்றி சைத்த, முதுமூவ ரமரர்முத லியாருங் காணா முத்திரா மக்கனியே போற்றிபோற்றி.

அருவுருவா யமர்ந்தபரம் பொருளே போற்றி யரு வுருட னுருவமுநீ யானாய் போற்றி, யுருவமுட னடியயற் காய்க் கழனி தன்னி லுதித்தபர மானந்தக் கடலே போற்றி, கிரியைதனி லணுவேனுஞ் சுகமில் லென்று கிளத்தியஞா னானந்தப் பொருளே போற்றி, முருகு மலர் மணமெனவே நிறைந்து நின்ற முத்திரா மக்கனி யே போற்றி போற்றி. 6

நிர்க்குணமாய் நிராமயமாய் நிறைந்தாய் போற்றி நிராமயநிர்க் குணங்கடந்த பொருளே போற்றி, துர்க்

குணமே வடிவான மகளிர் தம்மைத் துறந்தவரே பர மசுக மடைவா ரென்று, பக்குவமி லடியற்கு மருளிச் செய்த பண்ணவனே பரம்பொருளே பரமா போற்றி, முக்குணமுங் கடந்தபர முதல்வா போற்றி முத்திரா மக்கனியே போற்றி போற்றி. 7

மனமுருகிக் கரங்கூப்பி வழுத்தா நின்ற மறுவிலா வடியருட னெனையு மாண்ட, வுனதருளுக் களவறி யேன் போற்றி போற்றி யுலகதனி லாசையுள மனதின் கண்ணே, வினவுசுக சத்தியசிற் சொரூப மென்றும் விளங்காதென் றருள்செய்த மேலோய் போற்றி, முன நால்வர்க் கருள்செய்த முனியே போற்றி முத்திரா மக் கனியே போற்றி போற்றி. 8

ஞானசுக சற்கனமாய் நின்றாய் போற்றி நடராச வடிவமுட னமர்ந்தாய் போற்றி, யீனமதி யடியற்காய்க் கழனி தன்னி லெழுந்தருளுந் தேசிகனே யிறையே போற்றி, வானவரு மடக்க வொணு மனதடக்கம் வழு வற்ற ஞானசுக மென்றி சைத்த, மோனசுக மேவடிவா யமர்ந்து நின்ற முத்திரா மக்கனியே போற்றி போற்றி.

தீமண்ணீர் கால்விண்ணுய்ச் சிறந்தாய் போற்றி சிவன்மதி யொளியுருவாய்த் திகழ்ந்தாய் போற்றி, மா மதியின் சாட்சியதா யமர்ந்தாய் போற்றி மகத்துக்கு மகத்தான மகேசா போற்றி, நாமவுரு வேவடிவாஞ் சகங்க ளெல்லா நணுகிடுஞ்சொப் பனமென்றே யரு ளிச் செய்த, மோகமுதற் கப்பாலா யமர்ந்து நின்ற முத் திரா மக்கனியே போற்றி போற்றி. 10

போற்றிமாலை முற்றுப்பெற்றது.



# 8. கிளிப்பயிற்று.



பாவனையு மபாவனையு மற்று னென்னீர் பாவிப் பார் பாவனைக ளாறு னென்னீர், சீவபர சகவடிவா யமர்ந்தா னென்னீர் திரிவிதத்துக் கப்பாலாந் தெளிவே யென்னீர், வீவதுவும் பிறப்பதுமா யுழன்ற வென்னை வேதித்து மெய்ப்பொருளாய்ச் செய்தா னென்னீர், மூவர்களு மறிவரிய முதலே யென்னீர் முத்திரா மக்கனியே யென்னீ ரென்னீர். 1

சத்தியசிற் சுகமாகி நின்று னென்னீர் தனையருளக் குருவடிவா யெழுந்தா னென்னீர், புத்தமுதம் விடமாகுந் திருவாக் காலே பூரணநீ யென்றுரைத்த பொன்னே யென்னீர், நித்தமுமே யனுதினமு முருகா நின்ற நேசருட னெனையாண்ட நிமலா வென்னீர், முத்தனுடன் பெத்தனுமா யமர்ந்தா னென்னீர் முத்திரா மக்கனியே யென்னீ ரென்னீர். 2

அன்னையினும் பரிந்தருளு மரசே யென்னீ ரறிவருளுந் தேசிகனே யறிவே யென்னீர், பன்னுமறை யீறுகளோர் கோடி யாலும் பகரவொணுப் பரம்பொருளே பரனே யென்னீர், தன்னையெனக் களித்திடுமோர் தாதா வென்னீர் சங்கரன்மா லயனுகித் தழைத்தா னென்னீர், முன்னவனு யமர்ந்தருளு முதலே யென்னீர் முத்திரா மக்கனியே யென்னீ ரென்னீர். 3

சத்தசமுத் திரமணுவா யுருகா நின்ற தவறிலா வன்பருட னுண்டா னென்னீர், சுத்தபர மானந்தக் கடலே யென்னீர் தூவெளியே மாவறிவே துணையே யென்னீர், சித்திதனிற் சித்தமது மயங்கா வண்ணந்

தீர்ந்தகன வதுவெனவே தெரித்தா னென்னீர், முத்தி யதே பொருளெனவு முரைத்தா னென்னீர் முத்திரா மக்கனியே யென்னீ ரென்னீர். 4

காவலர்கள் புகழ்கழனித் தேவே யென்னீர் கற் பகமே யற்புதமே கனமே யென்னீர், நாவலர்க ளனுதி னமுந் தேடி வாட நலமிலா வெனைத்தேடி யாண்டா னென்னீர், தாவலிலாக் குணக்கடலே யமுதே யென் னீர் சற்கனமே சிற்சுகமே தருவே யென்னீர், மூவர் களு மறிவரிய பரனே யென்னீர் முத்திரா மக்கனியே யென்னீ ரென்னீர். 5

தூலமுத னவவிதத்துக் கப்பா லாகித் துரியவடி வாய்விளங்குஞ் சுடரே யென்னீர், சீலமிலா விராட்டா திக் கப்பாலாகிச் செகசாட்சி யாய்விளங்குந் தேசே யென்னீர், காலமுதற் கப்பாலா யபேதமான கருதரிய சுயஞ்சோதிப் பொருளே யென்னீர், மூலமிலா மூலம தாய் விளங்கா நின்ற முத்திரா மக்கனியே யென்னீ ரென்னீர். 6

மதிபருதி மகன்றனையா யமர்ந்தா னென்னீர் வான்காறீ யறலாகி வதிந்தா னென்னீர், கதியிலனாய் நாரியரைக் கதியா வெண்ணுங் கடையேற்குங் கதியளி த்த கதியே யென்னீர், விதிவிலக்குக் கப்பாலாம் வெளி யேயென்னீர் வேதியனே குணமலையே விமலா வென் னீர்,முதிரமெனக் கைம்மாறு வேண்டா னென்னீர் முத்திரா மக்கனியே யென்னீ ரென்னீர். 7

பொய்ச்சகத்தை மெய்யெனவே கருதிக் கொண்டு புலன்வழியே திரிந்தலைந்து புழுவார் மெய்யை, நச்சி யதை நானென்றே யலையு மென்னை நாடறியக் குரு

வாகி யாண்டா னென்னீர், விச்சையிலா வென்றனக்கு முச்ச மாக விளங்கிடுநற் பரமளித்த விதாதாவென்னீர், முச்சகமும் புகழ்கழனித் தேவே யென்னீர் முத்திரா மக்கனியே யென்னீ ரென்னீர். 8

சேப்புபரப் பிரமாதி நாம மெல்லாஞ் சிறிதெனி அஞ் சுபாவத்தி லிலாதா யென்னீர், தெப்பமெனப் பவக்கடலைக் கடத்தா நின்ற தேசிகனே சின்மயமே சிவமே யென்னீ, ரொப்பொருவ ரில்லாத வரமே யென்னீ ருத்தமனே கண்மணியே யுயிரேயென்னீர், முப் பதத்தி னொன்றுன முதலே யென்னீர் முத்திரா மக் கனியே யென்னீ ரென்னீர். 9

ஆலமதா மவாமிகவு முடைய வென்னை யடிமை கொளுமுனதருளுக் களவே தென்னீர், சீலமதா மறி வுடைய வடிய ரோடே தினகரன்போல் விளங்குபா தேசே யென்னீர், தாலமுதற் றன்னுலே யறியப் பட்ட சகலமுநற் சிவமெனவே யுரைத்தா னென்னீர், மூல மதாந் தனையருளு முனியே யென்னீர் முத்திரா மக்க னியே யென்னீ ரென்னீர். 10

கிளிப்பயிற்று முற்றுப்பெற்றது.



## 9. அடைக்கலம்.



மாத ரென்னு மருட்கட லின்கணே
காத னெஞ்சங் கலங்கி விழாவகை
யேத மற்றவ னேகுறிக் கொள்ளெனை
யாத னேனடி யேனின் னடைக்கலம். 1

தந்தை யேமுத லானபுன் சங்கத்திற்
சிந்தை யானது சென்றழி யாவகை
யெந்தை யேகுறிக் கொண்டெனை யென்றுகொ
ளந்த மில்லறி வேநின் னடைக்கலம். 2

சற்கி ருத்தியப் பொன்னின் றளையினைப்
பொற்பி னெஞ்சகம் பூண்டுகொ ளாவகை
தற்கு றிப்பொடு தானெனை யென்றுகொ
ளொக்க மேலி லுரவோ யடைக்கலம். 3

பதங்கண் முத்தி யெனும்பகற் கானலிற்
கதங்கொ ணெஞ்சங் கலங்கி யிடாவகை
யிதங்கொ டுக்குமின் பேகுறிக் கொள்ளெனை
யுகந்த தேசிக னேயுன் னடைக்கலம். 4

ஆக மேமுத லேந்தெனுங் கோசத்திற்
சோக நெஞ்சந் தொடர்ந்துழ லாவகை
யேக வின்புரு வேகுறிக் கொள்ளெனை
யோக னேயடி யேனுன் னடைக்கலம். 5

விடய மைந்தெனும் வீயா நரகினின்
மடமை யேனுள மாய்ந்து விழாவகை
கொடையின் மிக்கவ னேகுறிக் கொள்ளெனை
யடைய வன்புரு வேநின் னடைக்கலம். 6

சங்க மாந்த விராதசா லத்தினிற்
பங்க னேனகப் பட்சி படாவகை
யெங்க ளையக னேகுறிக் கொள்ளெனை
யங்க ளவடி யேனின் னடைக்கலம். 7

நினைவ தென்னு நிகரில் சுழலினின்
மனது சென்று மடிந்து விடாவகை
யெனது தேசிக னேகுறிக் கொள்ளெனை
யனக னேயடி யேனின் னடைக்கலம். 8

ஆசை யென்னு மடுகடு வின்கணை
பாச மாமகம் பற்றி விழாவகை
கோச மற்றவ னேகுறிக் கொள்ளெனை
யீச னேயிறை யேநின் னடைக்கலம். 9

சகல கேவல மற்ற சமாதியிற்
பகவி லின்புரு வாய்மனம் பற்றிட
விகழ்த லில்லறி வேகுறிக் கொள்ளெனை
யகம தாநிறை வோனே யடைக்கலம். 10

அடைக்கலம் முற்றுப்பெற்றது.

## 10. அபயவரதம்.

அத்தனே சுக வானந்த நாடனே
முத்தனே முத்தி ராமலிங் கேசனே
நித்தனே யபய நிகழ்ந் திட்டிடச்
சித்தனே திரு வுள்ளத் தடைத்திடே. 1

நந்த லில்லறி வானந்த நாடனே
முந்தையே முத்தி ராமக் குரிசிலே
நிந்தையில் லபய நிகழ்ந் திட்டிட
வந்த மிறிரு வுள்ளத் தடைத்திடே. 2

நாத னேயறி வானந்த நாடனே
கோத னேனுள மன்னுங் குருமணி
யேத மில்லபய நிகழ்ந் திட்டிட
வாத னேதிரு வுள்ளத் தடைத்திடே. 3

ஞான சத்திய நற்சுக நாடனே
தீன னேன்பவந் தீர்க்குஞ் சிரோமணி

யீன மில்லப யநிகழ்ந் திட்டிட்
வூன மிறிரு வுள்ளத் தடைத்திடே. 4

பாக மற்ற பரஞ்சுக நாடனே
சோக மற்ற சுகம்பொழி கொண்டலே
யேகனே யபய நிகழ்ந் திட்டிட
வூக னேதிரு வுள்ளத் தடைத்திடே. 5

சோதியே சுக வாநந்த நாடனே
கோதிலாக் கழ னிக்குருதே வனே
நீதியே யபய நிகழ்ந் திட்டிட
வாதி யேதிரு வுள்ளத் தடைத்திடே. 6

ஆசை யற்றெழி லானந்த நாடனே
நீச னேனையு மாண்டரு ளின்மலா
வேச லில்லபய நிகழ்ந் திட்டிட
வீச னேதிரு வுள்ளத் தடைத்திடே. 7

நாம ரூபமி னற்சுக நாடனே
சேம மேயரு டேசிக மூர்த்தியே
நேமனே யபய நிகழ்ந் திட்டிடத்
தீமையி றிரு வுள்ளத் தடைத்திடே. 8

தொலைவி லாதவனே சுக நாடனே
புலைய னேனையு மாண்டருள் புண்ணியா
வெலையிலா வபய நிகழ்ந் திட்டிட
வலைவி லாத்திரு வுள்ளத் தடைத்திடே. 9

நாச மற்றவ னேசுக நாடனே
காச மற்றறி வாக்குங் கருணையா
வேசிலா வபய நிகழ்ந் திட்டிட
வாசி லாத்திரு வுள்ளத் தடைத்திடே. 10

அபயவரதம் முற்றுப்பெற்றது.



## 11. பிரார்த்தனை.



பங்கயன் மால்சிவன் றேடற் கரிய பரம்பொருளே
யிங்கொரு மானுட னாகிப் புவியில்வந் தென்றனக்கு
மங்கையி னெல்லியி னேப்பத் தனையரு ளாரமுதே
மங்கையர் பான்மனஞ் செல்லா வரமருண் மாட்சியனே.

மாட்சிய னேயடி யற்கெளி தாகி மயக்கறுத்த
காட்சிய னேகரு ணாலய னேகரு தாதவர்க்குப் [லாங்
பூட்சிய னேபரி பூரண னேயென் பொல் லாங்கையெல்
தாட்சிய தின்றித் தவிர்த்தரு ளாயரு டண்முகிலே. 2

முகிலே யனைய குழலார் மயக்கின் முயங்குமெனைத்
தகவோ டருளிறை யாகித் தடுத்தரு டத்துவனே
சகமா னதிற்பலி கொண்டே திரிந்து சகஞ்சிரிக்க
மகவோ டரும்பித்தன் போலே சரிக்க வருவதென்றே.

என்றே விடயம் விடமெனக் கண்டறி வாகியெங்கும்
பொன்றா மனித்திய முத்த பரிசுத்த பூரணத்தை
நன்றா யகமென நண்ணிப் பவத்துயர் நானறுப்பேன்
குன்றா தவானந்தக் குன்றே கழனிக் குருமணியே. 4

மணியே மணியி னொளியே மனக்கரி யாகமன்னுங்
குணியே குருவின் கொழுந்தே கழனிக் குருமணியே
பணிபோல் வருத்து நினைவுபல் வாசனை மாசறுத்துத்
திணிவாஞ் சமாதி தனையடைந் தேசுகஞ் சேர்வதென்
[றோ. 5

என்றோ பிறந்திறந் தேசுழ லாநின்ற வென்றனக்கும்
பொன்றோ டொத்த விலாத்தனை யேயருள் புண்ணியனே
துன்றுங் குடும்பத் தளைதனை நீக்கித் துறவடைந்தே
குன்றின் குகைவனந் தன்னிற் பொருந்தக் குறுகுவதே.

குறுகு மடிய ருளமா மரத்தினின் கோணலெனு
ஞ், செறிகின்ற காம முதலபி மானத்தைத் தீர்த்தருள்
வோய், பிறிவொன் றிலாப்பர மாம்பொரு ளேயக
மென்றறிந்தே, தறியின் மனமுற வேயரு ளாய்நிறை
தத்துவனே. 7

தத்துவ மென்றிடு மாறுறி லேலைழுந்த தத்துவமாம்
வத்து வெனவருண் மாட்சிய னேயென் னகநிறைந்த
சித்துரு வேயக வஞ்ஞானந் தீர்க்குந் தினகரனே
புத்திர தார முதலாசை நீங்கப் புகன்றருளே. 8

அருளே திருவுரு வாகிவந்தேயறி வொன்றுமிலா[யனே
மருளேன் றனையும் பொருளாக வாண்டருள் வண்மை
யிருளே யனைய குழலார் மயலைவிட்டேறிநித்தம்
பொருளான தன்னை மறவா வரமருள் புண்ணியனே. 9

புண்ணிய னேசுக வானந்த னேபரி பூரணனே [பிற்
திண்ணிய நெஞ்சுடை யாரெனுந் தேவுன் றிருக்குறிப்
கண்ணிய ராயி னவர்பிற வாரடி யேன்பிறப்பைக்
கெண்ணிய மின்றி யறுத்தரு ளாய்கிளர் பங்கயனே.

பிரார்த்தனை முற்றுப்பெற்றது.



## 12. திருப்பள்ளியெழுச்சி.



போற்றிசற் சிற்சுக மாகிய பொருளே பூரண னே
யய ஞான னரனு, நாற்றிசை முனிவரு மறிவதற் கரி
யோய் நானிலந் தனிற்குரு வாகிய பெரியோய், சீற்றமி
லடியர்க ணிறைந்தொளிர் கின்ற திருவினின் மிகுகழ
னிப்பதி யுறையு, மேற்றமுங் குறைதலு மில்லரு
ளிறையே யென்னர சேபள்ளி யெழுந்தரு ளாயே. 1

ஞானநன் கதிரவ னெழுந்தன னினது நலனுறு மடியரி னகவிரு ளகன்ற, மானமு ஞானமு முறுமவர் மதியா மதிகளு மவர்பொறி யெனுமுடுக் கணத்தி, னூனம ரொளிகளு மழுங்கின வவர்க ளுயர்முக மரைமலர் விரிந்தன கழனி, யீனமில் பதிதனி லமரரு ளிறையே யென்னர சேபள்ளி யெழுந்தருளாயே. 2

தேவர்கண் மனுடர்க டாவர மாகத் திகழ்ந்தரு டேவ நின் றிருவடி யிணையைப், பாவனை யறவகத் திருத்தலி னுளம்போற் படர்ந்துள் விருளது நீங்கின தெங்கு, மாவலில் லடியருக் கணுகிய வொளியே யவையுறு மவ ர்களுக் கணுகலில் விருளே, யேவமில் கழனியி னமரரு ளிறையே யென்னர சேபள்ளி யெழுந்தருளாயே. 3

சுத்தமெய் யடியவர் தோத்திர மொருபாற் றும்புரு நாரதர் கீதங்க ளொருபாற், பத்தர்கள் சித்தர்கள் பரவொலி யொருபாற் பரமநின் னுருவினை நினைந்துள மழிந்தே, யத்திபோ லுருகிடு முனிவர்க ளொருபா லையநின் கடைத்தலைப் புறத்தினி னிறைந்தா, ரெத் தியே யென்னையு மாண்டரு ளிறையே யென்னர சே பள்ளி யெழுந்தரு ளாயே. 4

அன்பமிதா ருருவதா மடியருக் குரிய வகண்டமா முருவெனும் விருத்தியா மலையிற், றுன்பமில் லொளி யுரு வாகிய நீதான் றுலங்கிய முறையெனக் குணதி சைக் கிரியிற், பன்பெரும் புகழ்கதி ரவனுதித் தனனுற் பரவிடு கழனியி னமரரு ளிறையே, யென்பது முருகு நல் லடியருக் கெளியா யென்னர சேபள்ளி யெழுந் தரு ளாயே. 5

மன்னிய முனிவரும் வணங்குதற் கரிய மலரடி யிணை யிணை யடியர்கண் டுருகிச், சென்னியிற் கரமது சேர்த்திரு கண்கள் செலம்வரத் தெளிவுடன் றுதித் திடு மொலிபோற், பன்னிய குயில்கிளி கொடிகடம் மொலியும் பரவிடு வலம்புரி முழக்கமு நிறைந்த, வின்னிய முழவதிர் கழனியின் னிறையே யென்னமு தேபள்ளி யெழுந்தருளாயே. 6

அலையினி லலைனுரை தோன்றியு மடங்க வலையு தித் திறத்தலி லவ்வகை யதுபோன், மலைவுயிர் சகபர முனிலெழுந் தடங்க மாய்தலும் பிறத்தலு மற்றொளி ரறிவே, கலைகளைப் பொருளென மிகமிகக் கதறுங் கடையனை யாண்டருள் கருணையங் கடலே, யெலையறு வளநிறை கழனியி னிறையே யென்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. 7

சோகமுற் றுறைதரு முடலினைத் தானுத் துகளு றத் தானெனக் கருதிய வெனக்கு, மோகமில் லறி வதை யருளிய தலைவா மூதறி வினர்நிறை கழனியின் முதல்வா, நாகருங் ககனரு மற்றுள வெவரு ஞானநல் விழியினுற் காணுதற் குரியோ, யேகமில் விழியுளர் காணுதற் கரியோ யென்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. 8

மேகமும் பவனனு மின்னலு மிடியு மிகவுதித் தடங்கினுங் குறைவிலம் பரம்போற், சோகமுந் துக் கமு முனிலெழுந் தடங்கத் துகளற விளங்கிய சுத்த வம் பரனே, மாகருந் தேடுதற் கரியதென் கழனிமாநகர் தனிலெழுந்தருளிய பரனே, யேகநீ பொருளென வருளி ய விறையே யென்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே.

பொருளென வனிதையர் புதல்வர்தம் முடனே பொருளையுங் கருதிய புலையனைப் புவிமேற், றெருளுறு மடியரின் கணத்தொடு சேர்த்துத் திருவரு ளளித்த

நற் றேசிகத் திருவே, யருளெனும் பொருளினைப்
பொழிமுத்தி ராமலிங்கதே சிகனெனு மாரிய முகிலே,
யிருளற மணியொளிர் கழனியின் னிறையே யென்னமு
தேபள்ளி யெழுந்தரு ளாயே. 10

திருப்பள்ளியெழுச்சி முற்றுப்பெற்றது.



## 13. அதிசயம்.

முன்னி மலரோ னறியாத முதல்வன்
வன்னி வனத்தில் வந்தா னென்னே
வன்னி வனத்தில் வந்தே யெனக்குந்
தன்னை யளித்த தயவீ தென்னே. 1

கண்ண னறிதற் கரிதாங் கடவுள்
வண்ணக் கழனி வந்தா னென்னே
வண்ணக் கழனி வந்தென் பிறவிப்
புண்ணை யழித்த புகழீ தென்னே. 2

நீல கண்ட னறியா நிமலன்
கோலங் குருவாக் கொண்டா னென்னே
கோலங் குருவாக் கொண்டே யெனக்குஞ்
சீல மளித்த செயலீ தென்னே. 3

விண்ணோ ரறிதற் கரிதாம் விகிர்தன்
மண்ணோ ரறிய வந்தா னென்னே
மண்ணோ ரறிய வந்தே யடியேற்
கெண்ணு வறிவை யிசைத்தா னென்னே. 4

வேதம் பலவு மறியா விமல
ஞாத னுருவா வமர்ந்தா னென்னே
யாத னுருவா வமர்ந்தே யடியேற்
கேதில் லறிவை யிசைத்தா னென்னே. 5

அதிசயம் முற்றுப்பெற்றது.



# 14. வள்ளல்.



கேட்டது கொடுத்தன முதலாத் தேகங் கேட்பி னுங் கொடுத்திடு மவரை, நாட்டுளோர் தம்மி லறி விலா ரென்று நலம்புனை வள்ளலென் றுரைப்பார்,வாட் டமி றனது வடிவருள் வலத்தால் வள்ளலென் றுறு பெயர் நினக்கே, தேட்டமில் லடியார் சூழ்ந்திடு கழ னித் தேவனே தேசிகக் கொழுந்தே. 1

வாங்கிடு மவருக் கழிந்திடும் பொருளை வழங்கி னுற் றுன்பமே யென்று, நீங்கிடா தென்றே யடியருக் கெல்லா நிகரிலா நித்தியப் பொருளைப், பாங்குற வளிக் கும் வலத்தினு லன்றே பழமறை கொடையனென் றுனையே, தீங்கிலா துரைக்கக் கண்டனங் கழனித் தேவனே தேசிகக் கொழுந்தே 2

வள்ளலென் றுறுபே ரனித்தியப் பொருளை வழ ங்குனர் தமக்குரித் தாகத், தெள்ளறி வில்லார் மட மையி னுரைப்பர் தெளிவினே ரறிவினு னுடிற், கள்ள மில் லடியர்க் கழிவிலாப் பொருளைக் கருணையா லளித் திடு நினையே, வள்ளலென் றுரைக்கத் தகுங்குரு மணியே வனப்புறு கழனிநா யகனே. 3

வள்ளல் முற்றுப்பெற்றது.



# 15. அருட்பத்து.



முத்தி யேயறி வாகிய வுருவே முத்தி ராமலிங் கேசநற் குருவே, பத்தி யேதுமில் லார்தமக் கிருளே பாவி னோர்தமக் கினியநற் றெருளே, புத்த னேநிறை வாகிய வமலா புரங்க ளின்கரி யாகிய நிமலா, வத்த னேசுக மாகிய பொருளே யடிய ரின்புற வங்கணு வருளே. 1

தன்னை யேயரு ளாரியக் கொழுந்தே தலைவ னே கழ னிக்குரு மருந்தே, முன்னை யோர்க்கரி தாகிய மூனியே மூட னேற்கெளி தாகிய தனியே, கன்ன லின்சுவை யேசருக் கரையே கட்டு மாவினின் றீம்பழச் சுவையே, யன்னை யேயரி தானதற் பொருளே யடிய னின்புற வங்கணு வருளே. 2

கோல மேகுரு வாகிய கோவே குழக னேநிறை வாகிய தேவே, மூல மேதனி யாகிய செறிவே முத்தி ராமலிங் கேசநல் லறிவே, சீல மேயரு ளேபர சிவமே தீன னேன்பவந் தீர்த்தருள் சுகமே, யாலி யேயறி வாகிய பொருளே யடிய னின்புற வங்கணு வருளே.

தேவ தானவர் முனிவர்கண் மணியே தேவ தேவமெய்த் தேசிக வணியே, யோவி லாவொளி யாகிய சிரமே யுகந்த தேசிக னேயரு ளுரமே, நாவ லோர்புகழ்ந் தேத்துநன் மணியே நாயி னேனுளந் தங்கிய நிதியே, யாவ லற்றவர்க் கினியநற் றெருளே யடிய னின்புற வங்கணு வருளே. 4

மூல மேயொரு மூலமில் லருவே முத்தி ராமலிங் கேசநற் றருவே, தூல சூட்சும கார ண வடிவே துய்தி லாவவை யற்றநன் முடிவே, கால மூன்றுங் கடந்த பே ரொளியாய்க் கண்ண னண்ணுதற் கரியசீர் வெளியா, யால மாமெனை யாண்டரு டெருளே யடிய னின்புற வங்கணு வருளே. 5

நீதி யேசுக மாகிய காவே நீச னேனையு மாண்டருள் கோவே, சாதி யாமபி மானம தறவே தவறி லாவறி வருளிய நிறைவே, யோதி யேபரி பூரண

விறையே யுகந்த தேசிக னேயரு ளிறையே, யாதி யேசுக மாகிய தெருளே யடிய னின்புற வங்கணு வருளே. 6

வேத னேபரி பூரண சுயமே மெய்ய ருக்கெளி தாகிய நயமே, பாத மென்றலை வைத்தருள் புனிதா பாவி யேனையு மாண்டரு ளினிதா, ஓத னேநிறை வானநல் லூரனே முத்தி ராமலிங் கேசதற் பரனே, யாத னேயப யாவரும் பொருளே யடிய னின்புற வங் கணு வருளே. 7

முத்த னேபர மாகிய சிவனே மூல மேகரு வேரறுப் பவனே, சுத்த னேதனைப் பொழிபர முகிலே கருது வொர்பவ மறவேறி யயிலே, பித்த னுமெனை யாண்டருள் பெரியோய் பேரு மூருமில் லாவொரு கரியோ, யத்த னேயறி வாகிய தெருளே யடிய னின் புற வங்கணு வருளே. 8

பன்னு மாமறை யறிவதற் கரியோய் படிற னே ன்மிக நாடுதற் குரியோய், முன்ன லில்லகந் தோன்று சூ ரியனே முத்தி ராமலிங் கேசவா ரியனே, பொன்னு மாதரும் பூமியு நாடிப் புலம்பு மென்றனைத் தான்மிகத் தேடி, யன்னை போலுகற் றனையரு டெருளே யடிய னின்புற வங்கணு வருளே. 9

பாவ மற்றவர்க் கினியநல் லவனே பரம னேயொரு நினைவுமில் லவனே, மூவ ரும்புகழ் கின்றநன் மயனே முத்தி ராமலிங் கேசசின் மயனே, யோவி லாதெழு நினைவையுந் தறித்து வூன மாகிய வாதனை யறுத்து, வாவி யேயறி வாகிய பொருளே யடிய னின்புற வங் கணு வருளே. 10

அருட்பத்து முற்றுப்பெற்றது.



# 16. பிழைபொறுத்தல்.



தேசுபெறு சின்மயமே சிவமே தேவே தென்கழு
னி யுறைந்தருளுந் தெய்வக் குன்றே, காசுபெறு பல
விடய வுததிதன்னிற் கவிழ்ந்திருந்த வெனையழைத்துக்
கருணையாலே, நாசமிலா வறிவுருவை யருளிச் செய்த
நாயகனே நின்னருளை நாடாப் பொல்லா, நீசமனப்
பாவிமுனஞ் செய்யா நின்ற நீக்கவொண்ணாப் பிழைகட
மைப் பொறுத்தே யாள்வாய். 1

சத்தியசிற் சுககனமா யகண்ட மான தற்பரனே
சமிவனத்தி லமருங் கோவே, நித்தியமி றுக்கசமு சா
ரந் தன்னை நிகரில்சுக மாகநிதங் கருதா நின்ற, புத்தி
பெறு மீனருட னுறவா யுற்ற புன்மையனைத் தடுத்தா
ண்ட புனிதா நாயேன், சுத்தியிலா மனத்தனுன் முன்
னஞ் செய்த துணையில்பிழை தனைமிகவும் பொறுத்தே
யாள்வாய். 2

ஞாலமதிற் பாண்டிவள நாட்டின் மேவு நற்கழனி
நகரமர்ந்த ஞானப் பேறே, சீலமிலாப் பாலனிணு மறி
வி லாத தியனேன் றனையாண்ட சீர்மா தாவே, பால
னறி யாமையினாற் செய்யா நின்ற பலபிழையுந் தாய்
பொறுத்தே யாளு மாபோ, லாலமெனக் கொடியம
னப் பாவி செய்த வரும்பிழைக டமைமிகவும் பொறுத்
தே யாள்வாய். 3

பிழைபொறுத்தல் முற்றுப்பெற்றது.



# 17. சோருபவணக்கம்.



அம்பலங் கோட்ட மடியரி னுளங்க ளமர்ந்திடுங் கோட்டமா வுடையோ, யம்பலங் கோட்டஞ் சேவல னுடனே யந்தண னறிந்திடற் கரியோ,யம்பலங் கோட்ட மவாமுத லில்லா வகத்தினர்க் கறிவருண் முதலோ, யம் பலங் கோட்ட மடவியி னருந்தி யசைவினீ யகமென வளிப்பாய். 1

பூதரந் தாபர னேசுக சத்திய பூரணனே
பூதரந் தாபரஞ் சூர்தரு மாவிருள் போக்கினனே
பூதரந் தாபர மாந்தனை யேயருள் புண்ணியனே
பூதரந் தாபரம் போன்மன நிற்கப் புரிந்தருளே. 2

ஆகம்ப லம்பை யரியரன் காணற் கரியவனே
யாகம்ப லம்பை யனையா யெனக்குயி ரானவனே
யாகம்ப லம்பை யகமுடை யோர்க்கு மளித்திடுவோ
யாகம்ப லம்பை யரிவையர் மோக மறவருளே. 3

அருளாற் றலைமைப் பதியா யமர்ந்தரு ளந்தணனே
யருளாற் றலைமை துலிக்கே தலைமக னானவனே
யருளாற் றலைமையி லாரும் பசுபதி யானவனே
யருளாற் றலைமைப் பொருளா நினையளி யந்தரனே. 4

சோருபவணக்கம் முற்றுப்பெற்றது.



# 16. பிழைபொறுத்தல்.



தேசுபெறு சின்மயமே சிவமே தேவே தென்கழு
னி யுறைந்தருளுந் தெய்வக் குன்றே, காசுபெறு பல
விடய வுததிதன்னிற் கவிழ்ந்திருந்த வெனையழைத்துக்
கருணையாலே, நாசமிலா வறிவுருவை யருளிச் செய்த
நாயகனே நின்னருளை நாடாப் பொல்லா, நீசமனப்
பாவிமுனஞ் செய்யா நின்ற நீக்கவொணுப் பிழைகட
மைப் பொறுத்தே யாள்வாய். 1

சத்தியசிற் சுககனமா யகண்ட மான தற்பரனே
சமிவனத்தி லமருங் கோவே, நித்தியமி றுக்கசமு சா
ரந் தன்னை நிகரில்சுக மாகநிதங் கருதா நின்ற, புத்தி
பெறு மீனருட னுறவா யுற்ற புன்மையனைத் தடுத்தா
ண்ட புனிதா நாயேன், சுத்தியிலா மனத்தனுன் முன்
னஞ் செய்த துணையில்பிழை தனைமிகவும் பொறுத்தே
யாள்வாய். 2

ஞாலமதிற் பாண்டிவள நாட்டின் மேவு நற்கழனி
நகரமர்ந்த ஞானப் பேறே, சீலமிலாப் பாலனினு மறி
விலாத தியனேன் றனையாண்ட சீர்மா தாவே, பால
னறி யாமையினுற் செய்யா நின்ற பலபிழையுந் தாய்
பொறுத்தே யாளு மாபோ, லாலமெனக் கொடியம
னப் பாவி செய்த வரும்பிழைக டமைமிகவும் பொறுத்
தே யாள்வாய். 3

பிழைபொறுத்தல் முற்றுப்பெற்றது.



# 17. சொரூபவணக்கம்.



அம்பலங் கோட்ட மடியரி னுளங்க ளமர்ந்திடுங் கோட்டமா வுடையோ, யம்பலங் கோட்டஞ் சேவல னுடனே யந்தண னறிந்திடற் கரியோ,யம்பலங் கோட்ட மவாமுத லில்லா வகத்தினர்க் கறிவருண் முதலோ, யம் பலங் கோட்ட மடவியி னருந்தி யசைவினீ யகமென வளிப்பாய். 1

பூதரங் தாபர னேசுக சத்திய பூரணனே
பூதரங் தாபரஞ் சூர்தரு மாவிருள் போக்கினனே
பூதரங் தாபர மாந்தனை யேயருள் புண்ணியனே
பூதரங் தாபரம் போன்மன நிற்கப் புரிந்தருளே. 2

ஆகம்ப லம்பை யரியரன் காணற் கரியவனே
யாகம்ப லம்பை யனையா யெனக்குயி ரானவனே
யாகம்ப லம்பை யகமுடை யோர்க்கு மளித்திடுவோ
யாகம்ப லம்பை யரிவையர் மோக மறவருளே. 3

அருளாற் றலைமைப் பதியா யமர்ந்தரு ளந்தணனே
யருளாற் றலைமை துலிக்கே தலைமக னானவனே
யருளாற் றலைமையி லாரும் பசுபதி யானவனே
யருளாற் றலைமைப் பொருளா நினையளி யந்தரனே. 4

சொரூபவணக்கம் முற்றுப்பெற்றது.



# ஸ்ரீவிநாயகர் துதி.



சத்திய மாகிச் சித்தாய்த் தங்கிய சுகமுமாகி
நித்திய மாகி யெங்கு நிறைந்தபூ ரணமுமாகிப்
பத்தியை யுடையோ ருற்ற பலவினை யூறுநீக்க
வத்தியி னுருவுமான வண்ணலை யகத்துள் வைப்பாம்.

அம்பலத்தி லேயுறையு மானந்த மூர்த்தியின்மேற்
கம்பமற யான்சொல் கவிநிறைய—நம்பினர்க்கு
நற்பயனை யீந்தருளு ஞானகளை வானைமுகக்
கற்பகமே நின்றருளிக் கா.



## 18. ஸ்ரீநடராஜர்துதி.



தூலமாஞ் சரீரஞ் சடமுடன் கனவி லாததா னீயலை யெனவுஞ் சூக்கும சரீரஞ் சுழுத்தியிற் றோன் றாத் தன்மையா னீயலை யெனவு, மூலமா மவித்தை சமாதியிற் காணா முறைமையா னீயலை யெனவு மூவித சரீர நீங்கினு நீங்கா முறையினீ விலட்சண னெனவு, ஞாலமே யறிய ஞானதே சிகனாய் நாயினுங் கடையனா மெனக்கு நவின்றிடு நினது கருணையி னளவை நான் மறை வழுத்தினு முடியா, வாலமே யமுதா யமர்ந்திடு மமுதே யடியனே னுயிர்த்துணைக் கரியே யமலமா யரு வா யகண்டமா யொன்றா யமர்ந்திடு நடனநா யகனே.

துறவினை யடைந்து துகளிலா வனத்திற் றுன் னியே காந்தனாய்த் திரிந்து துரிசறு மலையின் குகை யிட நண்ணித் தோற்றிடு நினைவெலா மகற்றி, நிறமு

டன் வடிவஞ் சுட்டொணுச் சிவமாய் நின்றிடுஞ் சமா
தியை யடைந்து நிரந்தரம் வரிட்ட பதமுட னிருக்க
நேருநா ளெந்தநா ளுளதோ, துறந்தவ ருறவே மறந்
தவர் பகையே துமதி யணிந்திடும் பொருளே சுட்டுத
லற்ற விடத்தினிற் புரண சுபாவமாய் விளங்கிடு மறி
வே, யறந்தலை கொண்ட நால்வருக் கருள வாலின்கீ
ழமர்ந்திடு மரசே யமலமா யருவா யகண்டமா யொன்
ரு யமர்ந்திடு நடனநா யகனே. 2

மகளிரைப் பெரியோர் மாமிச மெலும்பு மச்சை
தோன் முதலினு லுண்டாய் வளமிலா மலமு நீருமே
நிறைந்த வடிவெனத் திடமதா யறிந்து, சுகமதே வடி
வா நின்னையே தானுய்த் துகளிலா மனத்தினிற் றரி
த்தே துன்பமொன் றின்றிச் சுகமதா யிருந்தார் தூய்
திலா மனமுடை நாயேன், மகளிரின் வசன மதனுட
னவர்கள் வதிந்திடுங் கலன்களி னொலியை வண்மையா
ய்க் கேட்டு மவர்குழல் வதனம் வனப்புறு நிறந்தனங்
கண்டு, மகமதி லவரை யனுதின நினைத்தா லழிவிலாச்
சுகமுமென் றடைவே னமலமா யருவா யகண்டமா
யொன்ரு யமர்ந்திடு நடனநா யகனே. 3

குடும்பமே முதலாந் திருசிய மதனிற் கூடிடு மா
சையை யகற்றுங் கோதறும் விரத்தி கனவினு மறியாக்
குறைவிலா வாசையேன் மனத்தைக்,கெடுத்துநற் சமா
தி யடைவதின் பொருட்டாய்க் கேடிலா வருளிறை
பகர்ந்த கேதமே செய்யும் பலநினை வகற்றுங் கிளருநற்
றியானமே செய்யின், றடுத்திடக் கூடா லயமது தோன்
றுந் தன்னினுல் விகற்பமா நினைவு சங்கையாய் வந்து
சணமள வேனுஞ் சந்தத முதலதாந் தியான, மடுத்
திடா தகற்று மசைவினற் சமாதி யடைவது மெந்தநா
ளுளதோ வமலமா யருவா யகண்டமா யொன்ரு யமர்
ந்திடு நடனநா யகனே. 4

செய்யதாஞ் சிரோ ததியினிற் றேன்றிச் செகமதை யழித்திடுங் கடுவைத் திரிவித வுலக ரறியவே யயின்று தேவர்க டமக்கமிர் தளித்த,தையலோர் பாகா தமியனேன் மனமாஞ் சாகரந் தன்னிலே யெழுந்து சணமள வேனுஞ் சுகமிலா தகற்றிச் சருகுபோ லலையவேசெய்யும், பொய்யதே வடிவாம் பலவித விடயந் தனிலுறு மிச்சையாங் கடுவைப் புரணநீ யயின்று பொருவிலா னந்த வடிவதே யெனதுரு வாக, வய்பமில் லாமலளிக்குநா ளென்றோ வம்பலக் கூத்தனே யரசே யமலமா யருவா யகண்டமா யொன்று யமர்ந்திடு நடனநாயகனே. 5

மன்னவர் முதலாய் மால்பத மீறாய் மருவிய பதிெருரு வகையால் வருசுக மனைத்துந் தன்னது சிவலையாதலாற் சுகக்கடல் வடிவாய், மின்னலக் கினியே சூரியன் சிவன் மேவிய மனமுத லாக விளங்கிடு மறிவுக்கறிவதா தலினுன் மேலதா ஞானசூ ரியனுய்ப், பன்னிடுங் கால மூன்றினுஞ் சிவ சகபரமாறுத லதனைப் பகர்ந்திடுந் தானே யறிந்திருத் தலினுற் பரமமா யழிவுறுச் சத்தா, யன்னிய மிலவா யமர்ந்திடு நீயே யகமென நண்ணுநா ளென்றோ வமலமா யருவா யகண்டமா யொன்று யமர்ந்திடு நடனநா யகனே. 6

துகளெனுஞ் சிவ சகபர மின்றித் துலங்கிய சுடரொளிப் பரப்பே துரியமே ஞானு னந்தமே பரமே துரிசிலா வுளத்தினில் விளங்கும், பகவனே தேனே பாலுட னமுதே பலாமுத லானநற் கனியே பழுதிலாக் கரும்பி னிரதமே கரும்பின் கட்டியே சீனிசர்க் கரையே, தகவுட னமர்ந்த தமரதாய்ப் பிதாவாய்ச் சார்ந்த

நற் சுகமரு டாயாய்த் தவறிலாக் கருணைக் கடலதா யமர்ந்த தயாநிதி யானநற் சிவமே, யகமதா நினைநா ளனுதினங் கருதி யடையவுஞ் செய்யுநா ளென்றே வமலமா யருவா யகண்டமா யொன்றா யமர்ந்திடு நடனநா யகனே. 7

தூசிலா ஞான வமிர்தமே மேலாஞ் சுகநடம் புரிந்ததத் துவனே துன்பமே யிருத்தற் கிடமதாய் மயல்கதோன்றிடும் பூமியா யசுத்தம், வீசிய மலங்க ளடைத்திடுங் கூடமாய் வீணருக் கினியதா யமன்றன் வேலையை யொழிக்குங் காலமா யயன்றன் வினையினை மிகமிக வளர்த்தற், கேசிலாக் குணமா யிணையிலாத் துறவை யெளிதினிற் கெடுப்பதாய் மிகவு மிழிவதே நிலையா யிருளதே யகமா யிருக்குமா மகளிரைத் துறந்தே, யாசிலாப் புராண வுருவமா நின்னை யடையவுஞ் செய்யுநா ளென்றே வமலமா யருவா யகண்டமா யொன்றா யமர்ந்திடு நடனநா யகனே. 8

குற்றமுங் குணமுஞ் சமத்துவ முடைய கோதிலாக் குருவடி வாகிக் கோதையே குணமாய்க் கொண்டநா யேற்குங் குறைவிலாச் சமத்துவ மான, முற்றுமாம் பொருளே நினதுரு வென்று முழுதினும் பற்றறவிடுத்தே மோனமாஞ் சமாதி யடையென வுரைத்தாய் மூடனே னுடிடு மிடத்திற், கற்றறி வில்லா மனந்தனு வகமாய்க் கருதியுங் கருதொணுப் பொருளிற் களங்கமாம் பற்றை யடைந்ததாற் சமாதி கனவினு மில்லவேயில்லை, யற்றமில் லறிவே யருளிய படிநா னடையவுஞ் செய்யுநா ளென்றே வமலமா யருவா யகண்டமா யொன்றா யமர்ந்திடு நடனநா யகனே. 9

செங்கழ லதிர நடஞ்செயுந் தேவ தேவனே தே னினின் மொழியார் செய்யுமா மயலா மயலிலே தின முஞ் சுழன்றுதான் பறவைபோல் வீழ்ந்தும், பங்கமாங் கிலேசந் தருவதா மாசா பசாசினாற் பிடிக்கவே பட்டும் பரமமா மெனது சொருபமாம் பொருளைப் பகலினுங் களவுதான் செய்துந், துங்கமா மறிவின் மூடரா னவ ரோ டுறவுதான் மிகமிகச் செய்துந் துன்பமாங் குடும்ப விலங்கினைத் தரித்துஞ் சுழல்வதா மனமிக விருந்தா, லங்கமில் லறிவா நின்னைநா னடைந்தே யசைவற விரு க்குநா ளென்றோ வமலமா யருவா யகண்டமா யொன் றா யமர்ந்திடு நடனநா யகனே. 10

தேவரே முதலா மியாவருந் திகைத்துச் சிந்தை நைந் துருகிமெய்ம் மறந்து தினமுமே மாரன் விடுமொ ருகணையாற் சிறிதுமே யுய்ந்தவ ரில்லை,நாவலர் வியப்ப வவனைநீ யெரித்த தன்றியு நாகமோர் தனுவாய் நலமு டன் வளைத்த தன்றியு நமனை நாரணன் காணுணு மலராற், பாவமே யரிய வுதைத்தது மன்றிப் பலவித வல்லமை யுடையோய் பாவியேன் மனது வாவியி னினி தாய்ப் பருவமா மகளிரை நினைந்து. போவதே விருதா ய்ப் பொருந்திடும் வலியைப் புரணநீ யறுப்பது மென் றோ புந்தியே முதலா மறிவினுக் கறிவாய்ப் பொருந் திடு நடனநா யகனே. 11

மாதரைப் பற்றல் விடவினு முண்டாம் வகைய தைப் பகுத்திடுங் காலை மருவினு லைந்து பாதக மைந்து விடயமோ டகத்தினிற் பற்றுந், தீதுற மருவிச் சின்ம யந் தானைத் தெளிந்திடுந் தெளிவையு மகற்றித் தீது றுங் கிழா மனிதருங் கண்டாற் சீயென விகழவே செய்யு, மாதரை விட்டா லியாவுமே நீங்கி மனமது

மிறந்துதா னினது வடிவதா யிருக்கும் பூரண சமாதி மன்னிடு மாதலா லெனக்குப், போதமின் மகளிர் நினை வுதான் சற்றும் பொருந்திடா தகற்றுநா ளென்றோ புந் தியே முதலா மறிவினுக் கறிவாய்ப் பொருந்திடு நட னநா யகனே. 12

கண்ணிலாக் குருடன் காலிலா முடவன் காவினி லுயர்ந்ததாங் கோட்டின் கனியினை விரும்புந் தன்மை போற் றமியன் காதலா மனைவியே முதலாய், நண்ணி ய வுயிரின் சார்பினுங் காணி நன்மனை பொன்முத லான நவையுறு பொருளின் சார்பினு மீளா நசையுறுங் குற்றமு மல்லான், மண்ணினிற் கண்ட மகளிரைப் பார் த்து வனமிலா நாயென வலையு மனமுடை நானு மன மலா நிட்டை மருவவே கருதுத லெனக்கே, புண்ணிய சொருபா நகைவரு மந்தப் புன்மைநீ தவிர்ப்பது மென் றோ புந்தியே முதலா மறிவினுக் கறிவாய்ப் பொருந் திடு நடனநா யகனே. 13

அழுக்குடைப் பொதியைச் சுமந்திடுங் கழுதைக் கதிகமாய்க் குடும்பமாஞ் சுமையை யனுதினஞ் சுமந் துந் துன்பமென் றறியா வகத்தினேன் றனையுமே யாள, வழுத்துதற் கரியோய் மானிட வடிவாய் மாசிலா வடி யர்க ளுடனே வந்துதான் கழனி மாநகர் தனிலே வன் மனத் தேனையு மாண்ட, முழுக்குணக் கடலே மூவரு மறியா முத்தனே முத்தியின் வடிவே முன்னைநான் மறைக டேடியு மயர மூடனேன் காணுநற் றுணையே, புழுக்குடு காக்கும் புலையரை விடலும் பூரண சமா தியு மருளாய் புந்தியே முதலா மறிவினுக் கறிவாய்ப் பொருந்திடு நடனநா யகனே. 14

என்னுடை மனது விந்திய வசமா யிசைந்துதான் பகிர்முக மாம்போ தேதமி னினதா னந்தநிர்த் தனத்தை யின்புறக் காண்பது மன்றி, மன்னுத வில்லா மனமக மாயின் வாக்கினுக் கதீதமா நினது மட்டிலாச் சற்சிற் சுகமதாம் வடிவாய் மன்னவுங் கிடைத்திடு மாயி, னின்னமு மிதன்போ லெத்தனை சனன மெடுக்கவே சம்மத மன்றி யெள்ளள வேனும் பிறப்பிலா திருக்க யெனக்குமே சம்மத மில்லை, புன்னகை யுடையோய் முன்சொன நடைதான் பொருந்தவுஞ் செய்யுநா ளென்றோ புந்தியே முதலா மறிவினுக் கறிவாய்ப் பொருந்திடு நடனநா யகனே. 15

அற்பமாஞ் செல்வம் விரும்பியே வேட மடைந்தவ னதனினுக் கேற்ப வனுதின நடிப்ப வகண்டமாஞ் செல்வ மடையவே விரும்பிய யானுந், தற்பொரு ளதனை யடைந்திடு மவர்போற் சாலவும் வேடமே தரித்துச் சணமள வேனு மதனினுக் கேற்ற தத்துவ நடையினை யுறும, னற்பய னனைத்துஞ் சணமதிற்கெடுக்கு நாரிகள் முதல்தா நசையா னலமிலா நாய்போ லியாவரு மிகழ நாணுறு வண்ணமாய் நடந்தாற், பொற்புறு ஞானச் செல்வமா னதைநான் பொருந்துவ தெந்தநா ளுளதோ புந்தியே முதலா மறிவினுக் கறிவாய்ப் பொருந்திடு நடனநா யகனே. 16

மாசறு மேலாஞ் சாதன நிறைந்தே மருளறத் தனையறிந் தடைய வந்தநால் வர்க்கு மனமிலா நிலையை மவுனமாயளித்தசற் குருவே, நாசமிலறிவைக் கனவினு நினையா நாயினேன் றனக்குமுன் னுரைத்த நலமதாஞ் சமாதி நிரந்தரந் திரமாய் நண்ணிடச் செய்வது மன்றிப், பாசமில் லறிவுஞ் சமதிருட் டியுநற் பலன்றரு சாந்திகண் முதலாம் பலவித மலராற் றேவஞ நினக்கே பகலிர விலாமலெந் நாளும், பூசனை புரிய வருளிடாய் தில்லைப் பொதுவினி னடித்தவென் னுயிரே புந்தியே முதலா மறிவினுக் கறிவாய்ப் பொருந்திடு நடனநா யகனே.

தேசிக மணியே தேவர்கண் மணியே தீனனேற் கினியநன் மணியே தில்லைமா நகரி லுறைந்ததொன் மணியே திருக் குரியசின் மணியே, மாசிலா மறை யோர் முனிவர்க ளமரர் மாலயன் மகபதி யறியா வள் ளலே நினது வடிவினை மனமின் மாசிலாச் சமாதியி னிடமாய்க், காசிலா தறியக் கருதினே னந்தக் கருத் தினை முடிக்குநா ளென்றோ கம்பமில் லானே சம்புசங் கரனே கற்பனை யிறந்ததற் பரனே, பூசித பரனே நாசமில் லுரனே பூரண காரண வுரனே புந்தியே முத லா மறிவினுக் கறிவாய்ப் பொருந்திடு நடனநா யகனே.

எங்கணு நிறைந்த வினியகற் பகமே யெல்லையிலா வமிர்தவான் சுவையே யிகபர வாசை யிறந்தவ ருற வே யினருக் கினி திலாப் பகையே, துங்கநான் மறையின் முடியினுந் துறந்தோர் துகளிலா வுளத்தினுந் துலங் குஞ் சோதியே சிவ சகபர மாகித் தோன்றிடுங் கார ணப் பொருளே, பங்கனேன் மனதை யடக்கிநற் சமாதி பயிலவே கருதினு லந்தப் பாவியா மனது கவியென வலைத்துப் பண்ணிடுஞ் செய்கையென் சொல்வேன், புங்கவர்க் கினியோய் நினைவினை யகற்றிப் பூரண சமா தியென் றருள்வாய் புந்தியே முதலா மறிவினுக் கறி வாய்ப் பொருந்திடு நடனநா யகனே. 19

கருதொணுப் பரம சுகக்கடல் வடிவே கற்றவர்க் குரியதம் வடிவே கலைகளாற் றேடி யறிவதற் கரியோய் காணொணு வயனரிக் கரியோ, யிருளற வெறிக்குந் திர வியு மழுங்க வெழுந்திடு ஞானசூ ரியனே யெல்லையிலா நித்த சுத்தபூ ரணமா யிலங்கிய தனையரு டருவே, மரு ளனேன் றனையும் பொருளதா யாண்ட வள்ளலே சபை தனி னடித்த மாசிலாக் கருணைக் குன்றமே மாதர் மய லிலே மனமது மருண்டு, பொருளதாய் நினைந்தே யலை வுறு வண்ணம் புரணமாங் கருணையென் றருள்வாய் புந்தியே முதலா மறிவினுக் கறிவாய்ப் பொருந்திடு நடனநா யகனே. 20

காருற்ற குழலிலே யதில்வைத்த மலரிலே கடுவொத்த நயன மதிலே கடியுற்ற நுதலிலே யதில்வைத்த பொட்டிலே கழையொத்த தோள்க டமிலே, வாருற்ற முலையிலே யவர்கட்டு பட்டிலே மதியமெனும் வதனத்திலே வனமுற்ற நடையிலே கனியொத்த மொழியிலே மாசுறு நிதம்பத்திலே, பாருற்ற காலிலே சீருற்ற வடிவிலே பலவணியின் வரிசை தனிலே பருவமெனு மங்கைய ரிடத்திலே பழுதுற்ற பாவியேன் மனது சென்று, வாருற்றவலையென்ன வலைகின்ற வலைவுநீ யறுத்தருள்வ தெந்தநாளோ வம்பலந் தனிலடிய ரகமகிழ நிர்த்தமிடு மானந்தமான சிவமே. 21

பாவமே யோருருவ மாகத் திரண்டிடும் பண்பிலா நாரிதன்னைப் பகலிரவி லனுவேனு மிச்சமில் லாமலே பரிவுட னலைந்து தேடிக், கோபமுட னவர்கடா மேசினும் பேசினுங் குறைவில்பற் புகழ தாயுங் குணமிலவர் சுகமதனை யார்க்குமரி தாகின்ற குறைவில்சிற் சுகமதாயுந், தீபமென வொளிர்கின்ற பெரியோ ருரைத்ததிற் செல்லாது மாதர்சொன்ன செயலினிற் றவறாது செய்கின்ற தாகவுந் திரிகின்ற தீனனென்போ, லாவலுறு முல்குதனி லிலையில்லை யென்கொடுமை யார்பா லெடுத்து மொழிவே னம்பலந் தனிலடிய ரகமகிழ நிர்த்தமிடு மானந்த மான சிவமே. 22

ஐவகைப் பூத வுடலினுன் மயக்கி யைவகைப் பாதகங் கொடுக்கு, மைவிழி மடவார் மையலை விட்டு மாசிலா ஞானமே வடிவாந், தையலோர் பாகா நின்னையே சரணாய்த் தமியனே னண்ணுநா ளென்றோ, தெய்வமென் கின்ற பிரமன்மா லறியாத் தேவனே நடனநாயகனே. 23

நாட்டமூன் றுடைய செந்நிற மணியே ஞானமே யுருவமாஞ் சிவைக்கோர், வாட்டமி றனது வடிவிலே பாதி வழங்கிடும் வள்ளலே யெனக்கோர், தேட்டமே

மறவே யிருந்திடும் படிக்குத் தேவநீ செய்யுநா ளென்றோ, நாட்டுணை பரவு மரவமும் புலியுங் களித்திட நடித்திடுந் தவத்தோய். 24

காட்டலோட் டம்போற் சுத்தக் கண்ணிலே கலந்திருக்கத், தேட்டமே யுடையே ஞத றிருவுள மறியாதில்லை, வாட்டமே செய்யா நின்ற மனத்தினைத் தூர நீக்கி, நாட்டமில் சமாதி தன்னை நயந்தரு ணடனத் தோனே. 25

காலனை யடியற் காகக் காய்ந்திடுங் காலா போற்றி
பாலனி னிமித்தங் கீரோ ததியழை பாலா போற்றி
மூலமில் சகத்தை யுண்டு பண்ணிடு மூலா போற்றி
மாலயன் போற்ற மன்றுள் வயங்கிடு மாலா போற்றி.

சிதம்பரமே யவிதடித்த வாறதுபோன் மேன்மையுடன் றிகழாநின்ற, சிதம்பரத்தி லடியவர்க்காய் மாவுதன வுருவாகித் திகழுந் தேவே, சிதம்பரத்திற் கற்பிதமாஞ் சீவபர சகங்களெல்லாஞ் சிவமாய்க் கண்டு, சிதம்பரமாய் மனமிறந்து நானிருக்க நின்றனையே சிந்தித் தேனே. 27

வானமென நின்மலமா மன்னுபரி பூரணநின்
ஞானநடங் கண்டுதின நான்மகிழ்வ தென்நாளோ.

சஞ்சலமாஞ் சங்கற்பந் தானறவே நீதயவா
யஞ்சலஞ்ச லென்றே யருளுநா ளென்நாளோ. 29

ஸ்ரீநடராஜர்துதி முற்றிற்று.



## 19. சிவகாமியம்மை துதி.



நாவல ருரைத்த சாதன நிறைந்து நன்மைசேர் குருவினை யடைந்து நலமிலே ழைந்துந் தானல வென்று நண்ணிய சிற்சுகப் பொருளே, யாவலி றனது சொருபமா மென்றே யாரண முறைப்படி கேட்டு மன்புட

னதனை சிந்தனை செய்துமசைவிலா மனத்தினு லதுவா
ய்த், தாவரம் போல வடியர்க ளிருந்தார் தமியனேன்
முன்சொன நடையிற் சற்றுமே யின்றி யிருக்கவு மவை
கள் சகலமு முடையனுக் காட்டிச், சீவர்க ளெல்லாம்
வியப்பவே செய்யுஞ் சிறுமை நீ தவிர்ப்பது மென்றோ
சிவனிடங் காம முறுதலா லப்பேர் சிறந்திடுந் தேவியா 1
முமையே.

சத்திய ஞான வனந்தவா னந்த சங்கரற் கின்பமே
யுதவுந் தவறிலா வமுதாய்த் தனையருள் கனமாய்த்
தவிர்ந்திடாப் பிறவிசா கரத்தின், முத்தியாங் கரையி
லேற்றிடும் புணையாய் முகுந்தனும் பிரமனு மறியா மூ
லமாய்ச் சீவ சகமதாய்ப் பரமாய் முளைத்திடுஞ் சுலட்சு
ணப் பொருளாய்ச், சுத்தமாந் தியான முடையவ ருளத்
தே துகளிலாத் துரியவத் ததுவாய்த் துங்கபா மறை
யின் முடியிலே விளங்குஞ் சோதியாய் நீசனே னுயி
ராய்ச், சித்துரு வான தேவியே நின்னைத் தீனனே
னடையுநா ளென்றோ சிவனிடங் காம முறுதலா லப் 2
பேர் சிறந்திடுந் தேவியா முமையே.

அகங்கர மென்னு மலகைதான் வாழு மழகிலா
வகமதாய்த் தினமு மறிவிலா மனமாங் கவிகுதி கொள்
ள வசைவிலாப் பணிகளா யலகை, ககநரி சுணங்கன்
றேக்கிடும் விருந்தாய்க் கருதொணா மலசலக் குழியாய்க்
கற்றவர் தங்கட் கடுத்தசத் துருவாய்க் கனவுமின் னெ
னவனித் தியமாய்ச், சுகமதென் பதுதா னணுத் துணை
யிலாமற் றுக்கமே நிறைந்தசா கரமாய்ச் சுத்தமா யறி
வில் கடமெனச் சடமாய்த் தோன்றிடுந் தூலமாந் தனு
வைச், செகந்தனி லகமாய் நினைந்திடா தகற்றத் திருவு
ளஞ் செய்யுநா ளென்றோ சிவனிடங் காம முறுதலா 3
லப்பேர் சிறந்திடுந் தேவியா முமையே.

சிவகாமியம்மை துதி முற்றிற்று.

ஸ்ரீ குருஸ்துதி குசுமாஞ்சலி முற்றிற்று.